# சந்திரபோஸ் புனைகதைகளில் சோசலிச யதார்த்தவாதம்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப் பகுதி நேர முனைவர் (பிஎச்.டி.,)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**இரா. கண்ணன்**
(பதிவு எண்: 523)

நெறியாளர்
முனைவர் **ஆ. சீனிவாசன்**
தமிழ் உயராய்வு மையம்
அழகப்பா அரசு கலைக்கல்லூரி
காரைக்குடி - 630 003




**அழகப்பா பல்கலைக்கழகம்**
(தேசிய தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் 'A+' (CGPA: 3.64) தகுதி மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக் குழுவின்
முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)
காரைக்குடி - 630 003.
தமிழ்நாடு - இந்தியா

**ஜீன் - 2018**

**முனைவர் ஆ. சீனிவாசன்,**
உதவிப் பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி
காரைக்குடி - 630 003.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**'சந்திரபோஸ் புனைகதைகளில் சோசலிச யதார்த்தவாதம்'** என்னும் தலைப்பில் இரா.கண்ணன் அவர்கள் பகுதிநேர முனைவர் (Ph.D.,) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா அரசு கலைக் கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இதற்கு முன் இந்த ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

தமிழ்த்துறைத் தலைவர்

**(ஆ. சீனிவாசன்)**
நெறியாளர்.

**இரா. கண்ணன்,**
*முனைவர்பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்),*
*பதிவு எண்:523,*
*தமிழ் உயராய்வு மையம்,*
*அழகப்பா அரசு கலைக்கல்லூரி*
*காரைக்குடி - 630 003.*

*நாள்:*

# ஆய்வாளர் உறுதிமொழி

**'சந்திரபோஸ் புனைகதைகளில் சோசலிச யதார்த்தவாதம்'** *என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர்* **(Ph.D.,)** *பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.*

**(இரா. கண்ணன்)**
*ஆய்வாளர்*

*நெறியாளர் :*

**முனைவர் ஆ. சீனிவாசன்,**
*உதவிப் பேராசிரியர்,*
*தமிழ் உயராய்வு மையம்,*
*அழகப்பா அரசு கலைக்கல்லூரி*
*காரைக்குடி - 630 003.*

## நன்றியுரை

**'சந்திரபோஸ் புனைகதைகளில் சோசலிச யதார்த்தவாதம்'** என்னும் தலைப்பில் பகுதி நேர முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர் ஆகியோர்க்கு முதற்கண் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

காரைக்குடி அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வினை நிகழ்த்துவதற்கு எனக்கு வாய்ப்பளித்தத் தமிழ்த்துறைத் தலைவர் ம.துரை அவர்களுக்கும், என்னைப் பலவகையில் நல்லாற்றுப்படுத்தியும்; தொடக்க நிலையிலிருந்து ஆய்வேடு முழுமையாக்கிய நிலைவரை பல கருத்துக்களை வழங்கியும்; ஆய்வு செம்மைபெற ஆய்வு நூல்களையும் வழங்கிய **முனைவர் ஆ. சீனிவாசன்** உதவிப் பேராசிரியர் அவர்கட்கும், ஆய்வு நெறியாளரின் துணைவியாருமான **திருமதி வே. முருகேஸ்வரி** அவர்களுக்கும் உளம் கனிந்த நன்றிகளைக் காணிக்கையாக்குகின்றேன்.

ஆய்வுக் காலத்தில் ஆக்கமும் ஊக்கமும் வழங்கி உற்சாகப்படுத்திய அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மைய பேராசிரியர்கள் அனைவருக்கும் நன்றியுடையேன்.

இந்நிலைக்கு என்னை ஆற்றுப்படுத்திய மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் அன்பிற்குரிய அய்யா **பேரா.முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கும், அவருடைய துணைவியாருமான **திருமதி. பா.பிருந்தாரமணி** தலைமையாசிரியை அவர்களுக்கும், ஆ.சந்திரபோஸ் நினைவு அறக்கட்டளை நிறுவன **திரு. ஆ.பாலசுந்தரராஜ்** அவர்களுக்கும், அறக்கட்டளைச் செயலாளர் **திருமதி பா.பொன்னுத்தாய்** அவர்களுக்கும், அறக்கட்டளை உறுப்பினர்கள் **திரு.பா.சிவக்குமார், திருமதி.பா.ராஜேஸ்வ**ரி, **திருமதி.ஆ.ராசலட்சுமி, திரு .இரா.பஞ்சவர்ணம், மருத்துவர். பி.பா.விஜயாலயன்,** அவர்களுக்கும் நான் என்றைக்கும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

நான் தமிழ்க்கடலில் மூழ்கி மூச்சுத் திணறிய போதெல்லாம்

எனக்கு முத்தெடுத்துக் கொடுத்தவர், தமிழ் வானில் பறப்பதற்குச் சிறகுகளாய் இருந்தவர் காரைக்குடி அழகப்பா அரசு கலைக்கல்லூரி **முனைவர் க.மோகன்** அவர்களுக்கு என் நெஞ்சம் மறவா நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை ஆற்றுப்படுத்திய நல்லாசிரியர்களுக்கும், ஆய்விற்கு வேண்டிய தரவுகளைச் சேகரிக்க பல நூல்களைத் தந்து ஆய்வு செழுமைபெற உறுதுணை புரிந்த அழகப்பா பல்கலைக்கழக நூலகத்தாருக்கும், அழகப்பா அரசு கலைக்கல்லூரி நூலகத்தாருக்கும் என் உளங்கனிந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்கு பெரிதும் உதவியாக இருந்த எம் பள்ளித் தலைமை ஆசிரியர் **திரு. பி.ஜரின்ஜான்தார்க்** அவர்களுக்கும், என் இனிய நண்பர்கள் **திரு.வே.தியாகராஜன், திரு.தா.இனிக்கோ** அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை இதுகாறும் படிக்க வைத்து அகம் சூழ்ந்து கொண்டிருக்கும் என் அருமைப் பெற்றோர் **ஆ.ராமர் – பொன்னுத்தாய்** இருவருக்கும் என் நன்றிகளைப் பாதங்களில் சமர்ப்பிக்கின்றேன்.

எனக்கு உறுதுணையாகவும், உந்துதலாகவும் இருந்து என் வாழ்க்கைக்கு ஒளிவிளக்காக இருக்கும் என் அருமை மனைவி **திருமதி சி.அருள்விஜயா** அவர்களுக்கும், என் நன்றிகளைப் பாதங்களில் சமர்ப்பிக்கின்றேன்.

கடந்த ஐந்தாண்டு கால (2014-2018) ஆய்வுப் பணிக்கு இடையே பிறந்து இன்று நான்காவது அகவையைப் பெற்றிருப்பவர் எனது மகள் **க.ஜெயஸ்ரீ.** ஆய்வுப் பணியின் காரணமாக அப்பிஞ்சு மழலையோடு அதிகம் கொஞ்சி விளையாட முடியாமல் போனதற்கு நான் நெஞ்சம் வருந்துகிறேன். அவரிடத்து மன்னிப்பைக் கோருவதோடு நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ் ஆய்வினை உரிய நேரத்தில் கணினி அச்சு செய்து கொடுத்த **காரைக்குடி நிதிஷ்பிரபா கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தாருக்கும் என் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

**இரா.கண்ணன்**

# பொருளடக்கம்

## முன்னுரை

உலகில் மனித இருப்பு என்பது கதைகளால் நிரம்பிக் காணப்படுகின்றது. கடந்த காலம் குறித்தப் பதிவுகளின் வழியே வாழ்கின்ற ஒவ்வொருவருக்கும் சொல்வதற்கு நிறைய கதைகள் உள்ளன. மொழி, எழுத்து வழக்கில்லாதப் பழங்குடியினரும் கதைசொல்லிகள் தான். ஒரு மொழியின் இலக்கண, இலக்கிய வளமானது அம்மொழியில் படைக்கப்படும் புனைகதைகளின் செழுமையைப் பொறுத்தது. யதார்த்த வாழ்க்கையில் நல்லதும் கெட்டதும் குறித்துத் தனக்குள் ஆழ்ந்த கேள்விகளைக் கேட்கும் படைப்பாளர்கள், மொழி என்னும் ஊடகத்தின் வழியே முடிவற்ற கதைகளைப் படைக்கின்றனர். படைப்பாளியைப் பொறுத்த வரையில், புனைகதை என்பது தீராத தாக்கத்தின் வெளிப்பாடாகும். ஒவ்வொரு வாசகனின் மனதிலும் வண்டலாகப் படிந்துள்ள அனுபவங்களை ஏதோ ஒரு வகையில் புனைகதைகள் கேள்விக்குள்ளாக்குகின்றன. பொழுது போக்கு என்ற நிலைக்கப்பால், சிறுகதையோ, புதினமோ, கவிதைகளோ கருத்து நிலையில் மனித மனங்களில் ஏற்படுத்தும் தாக்கங்கள் அளவற்றவை.

ஒருவனின் படைப்பைக் காட்டிலும் அவனை அதிகமாகச் சொல்லக்கூடியது எதுவுமில்லை என்பார் ஜப்பானிய திரைப்பட மேதை அகிரா குரோசாவா. ஆனாலும் நவீன உலகின் நெருக்கடியான சூழலில், நூற்றுக்கும் மேற்பட்ட கதைகள் அடங்கிய தொகுப்பினை வாசிப்பது சராசரி வாசகரால் இயலாத செயல். காட்சி ஊடகங்களின் பரவலும் ஊடுருவலும் ஏற்படுத்தியுள்ள

தாக்கம் காரணமாக, வாசிப்புப் பழக்கம் இன்று மெல்லக் குறைந்து வருகின்றது. இத்தகு சூழலில் மானுடம் பாடிய வானம்பாடி சந்திரபோஸ் என்ற இலக்கியச் சாதனையாளரை இளம் தலைமுறையினருக்கு இனம்காட்ட வேண்டிய தேவை ஏற்பட்டுள்ளது.

**ஆய்வுத் தலைப்பு**

**"சந்திரபோஸ் புனைகதைகளில் சோசலிச யதார்த்தவாதம்"** என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

புனைகதைகளின் உள்ளடக்கம் வெவ்வேறு சமூகச் சிக்கல்களைச் சித்திரிக்கும். ஆனால் படைப்பாளர் சந்திரபோஸின் படைப்புகளில் சோசலிச யதார்த்தத்தை ஆராய்வது அவசியமான ஒன்றாகும். சந்திரபோஸ் தன்னுடைய படைப்புகளில் மேல்வர்க்கத்தார், கீழ்வர்க்கத்தினரை அடிமைப்படுத்தும் முறையையும், சாதிய அடக்கு முறைகளிலிருந்து விடுபடமுடியாமல் புழுங்குவதையும், இன்றைய தலைமுறையினர் அதிலிருந்து விடுபடத் துடிப்பதையும், பெண்களின் வாழ்வியல் சிக்கல்களையும், பொதுவுடைமை இயக்கங்களின் கொள்கைகளையும், எல்லாவற்றிற்கும் மேலாக அனைத்துச் சமூகச் சிக்கல்களையும் சோசலிச முறையில் வெளிப்படுத்தி விழிப்புணர்வை ஏற்படுத்துபவர்களையும் சொல்லிச் செல்கிறார். கீழ்ச்சாதி வர்க்கத்தினரின் வாழ்வியல் நெருக்கடிகளையும்;

போராட்டங்களையும் மனிதர்களின் அனுபவங்களின் பின்னணியில் நின்று அடங்க மறுப்போம் என்பதை முழங்காமல் சோசலிச வழிகளில் இலக்கியமாக்கியுள்ளார்.

ஆசிரியர் தான் வாழ்ந்த சமூக யதார்த்தத்தின் பாதிப்பால் ஏற்பட்ட உணர்ச்சிகளையும் மீண்டும் தன்னுள் எழச் செய்து அவற்றைப் புனைகதைகளாகப் படைத்துள்ளார். சிறந்த பாத்திரங்களைக் கொண்டு சிக்கல்களைக் கதைகளின் வழி புலப்படுத்திக் காட்டுகிறார். கீழ்த்தட்டு அல்லது விளிம்புநிலை மக்களின் சமுதாயப் பிரச்சினைகள், அவர்களது உரிமைகள், பெண்களின் வாழ்வியல் சிக்கல்கள் போன்றவற்றைச் சோசலிச யதார்த்தத்தின் வழி இவரது புனைகதைகளில் எங்ஙனம் படைக்கப்பட்டுள்ளன என்பதைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை**

சந்திரபோஸின் படைப்புகளான புதினங்கள்(3), குறும் புதினங்கள்(4), சிறுகதைத் தொகுப்பு (3), (46 சிறுகதைகள்) ஆகியவை இவ்வாய்வின் எல்லையாக அமைகின்றன.

**ஆய்வு முன்னோடிகள்**

தமிழில் புதினங்கள் குறித்து மிகுதியான ஆய்வுகள் இதுகாறும் வெளிவந்துள்ளன. பூமணியின் (1979) ‘பிறகு’, சிவகாமியின் (1989) பழையன கழிதலும், (1992) ஆனந்தாயி, பாமாவின் (1992) கருக்கு, (1994) சங்கதி, அறிவழகனின் (1992) கழிசடை, இமையத்தின்

*(1994)* *கோவேறு கழுதைகள், வினோதாவின் வசந்த முல்லை, ந.முருகேசபாண்டியனின் நவீனப் புனைகதைப் போக்குகள், இராசலெட்சுமியின் சோலைசுந்தரப் பெருமாளின் மண்ணும் மக்களும், சு.செந்தாமரையின் க.பஞ்சாங்கத்தின் படைப்புலகம், கோ.கேசவனின் இலக்கிய விமர்சனம் (ஒரு மார்க்சியப் பார்வை), நா.வானமாமலையின் மார்க்சிய ஆய்வுகள் போன்றவை இவ்வாய்வின் முன்னோடிகளாக அமைகின்றன.*

**சான்றாதாரங்கள்**

*சந்திரபோஸின் புதினங்களும், குறும்புதினங்களும், சிறுகதைகளும் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. தலித் எழுத்தாளர்ளின் புதினங்கள், தலித், மார்க்சிய, சோசலிசத் திறனாய்வு நூல்கள், ஆய்வுத் தொடர்புடைய திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகும்.*

**ஆய்வு அணுகுமுறைகள்**

*இவ்வாய்வு விளக்கவியல், சமூகவியல், மார்க்சிய அணுகுமுறை கொண்டு ஆராயப்படுகின்றது. ஒடுக்கப்பட்ட, பாதுகாப்பற்ற விளிம்புநிலை மக்களின் உரிமைகள் சந்திரபோஸ் புதினங்களில் இடம்பெற்றிருப்பதை விளக்கிக் காணும் நிலையில் விளக்கவியல்* (Descriptive approach) *அணுகுமுறையும், மக்களின் போரட்டத்தைப் பாத்திரங்களின் வாயிலாகக் கண்டறியும் முகமாக மார்க்சிய அணுகுமுறையும்,* (Marxist approach) *(சமுதாயத்தில் நிலவும்*

குறைகளைச் சுட்டிக் காட்டி ஏற்றத்தாழ்வு இல்லாத சமூகத்தை வளர்த்தெடுப்பது மார்க்சிய அணுகுமுறையாகும்). புனைகதைகள் சுட்டும் சமுதாயச் சிக்கல்களைப் பகுத்தும், தொகுத்தும் ஆராய்ந்து சமுதாய இயங்கு நிலைகளைக் கண்டறிய சமூகவியல் (Sociological approach) அணுகுமுறையும் இவ்வாய்வில் கையாளப்பட்டுள்ளன.

**கருதுகோள்**

இலக்கியங்கள் படைப்பாளன் மற்றும் அவன் சார்ந்த சமூகத்தின் வெளிப்பாடாக அமைபவை. விளிம்புநிலையினரின் வாழ்க்கையினைப் பதிவு செய்வதன் மூலம் மையத்தில் உறைந்திருக்கும் அதிகாரத்தின் சமநிலையை இழக்கச் செய்வது நவீன எழுத்தின் முதன்மையான செயலாகும். வட்டாரப் பின்புலத்தோடு தனது படைப்புகளை வெளிக்காட்டும் சந்திரபோஸ் அப்பகுதியில் வாழுகின்ற குடும்பம், சாதிய நிலைகள், பழக்க வழக்கங்கள் மற்றும் கலாச்சார, மொழிநடை, பின்னணியோடு விளிம்புநிலை மக்களின் வாழ்வைப் படைப்புகளில் பதிவு செய்திருக்க வேண்டும். மனித இருப்பின் அவலநிலையையும், சாதிய அடக்குமுறையையும் புனைகதைகளில் ஊடாடச் செய்திருக்க வேண்டும்; சமூகத்தின் ஏற்றத் தாழ்வற்ற இயக்கத்திற்கான தனது கருத்தையும் படைப்புகளில் முன் வைத்திருக்க வேண்டும் என்பதாக இவ்வாய்வின் கருதுகோள் அமைகிறது.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டதாக அமைகின்றது. அவை,

*1. சந்திரபோஸ் - வாழ்வும் பணியும்*

*2. சந்திரபோஸின் தலித், மார்க்சிய, சோசலிச யதார்த்தம்*

*3. சந்திரபோஸ் புனைகதைகளில் பெண்ணிய நிலை*

*4. சந்திரபோஸ் புனைகதைகளில் சாதிய, வர்க்கச் சிந்தனை என்பனவாகும்.*

**முன்னுரை***யில் ஆய்வுத் தலைப்பு, நோக்கம், எல்லை, முன்னோடிகள், சான்றாதாரங்கள், கருதுகோள், அணுகுமுறை, ஆய்வுப் பகுப்பு பற்றியச் செய்திகள் இடம்பெற்றுள்ளன.*

*தனிப்பட்ட படைப்பாளர் ஒருவரின் படைப்புகளை ஆய்வு செய்யும் பொழுது அவரைப் பற்றிய புரிதலைத் தருவது ஆய்வின் முதல் நிலையாகும். அவ்வகையில்* **சந்திரபோஸ் – வாழ்வும் பணியும்** *என்னும் முதல் இயலில் அவரின் பிறப்பு, கல்வி, பணி, படைப்புகள், அவர் பெற்ற பரிசுகள், பாராட்டுகள் போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன. படைப்பாளன் நினைவுகளின் வழியே இயங்குகின்றவன் என்று கூறலாம். படைப்பாளர் இளமைப் பருவத்தில் தான் வாழ்ந்த சூழல், தன்னைப் பாதித்த நிகழ்வுகள், மனிதர்கள் எனத் தனிப்பட்ட நிலையில் உண்டான பாதிப்புகள் படைப்புகளில் இருப்பினும், அவர் குறித்த விமர்சனங்களும், கருத்தாடல்களும் இவ்வியலில் விளக்கப் பெற்றுள்ளன.*

**சந்திரபோஸின் தலித், மார்க்சிய, சோசலிச யதார்த்தம்** *என்ற இரண்டாமியலில், தலித், மார்க்சிய, சோசலிச யதார்த்தம் குறித்து விளக்கப்பட்டுள்ளது. இவரின் படைப்புகளில் தலித் மக்களின் துயரங்களும் அவலங்களும் கதைக்களனாகும் நிலையில், தீவிரமான*

அரசியல் வெளிப்பாடு புனைகதைகளில் வெளிப்படுகின்றன என்பதும்; தலித், மார்க்சிய, சோசலிச சிந்தனைகள் புனைகதைகளில் ஊடாடுவதும் கண்டறியப்பட்டுள்ளன.

புனைகதைகளில் தேவையற்ற செய்திகளைத் திணிக்காமலும், தான் சார்ந்த மார்க்சிய இயக்கத்தின் பிரச்சார நெடியில்லாமலும், கதையின் கட்டுக்கோப்புக் குலையாமலும், கதைப் பின்னலைச் சிதைக்காமலும் நேராகக் கதை சொல்லும் பாங்கு குறித்தும் இவ்வியல் விளக்குகிறது.

**சந்திரபோஸ் புனைகதைகளில் பெண்ணிய நிலை** என்ற மூன்றாமியலில், பெண்களின் பிரச்சினைகள், எதிர்கொள்ளும் சிக்கல்கள், சமூகத்தில் அவர்களுக்குள்ள மதிப்பு, விளிம்புநிலைப் பெண்களின் வாழ்வியல், தொழிற்சாலைகளில் பணிபுரியும் பெண் தொழிலாளர்களின் நிலை ஆகியவை குறித்து மதிப்பீடு செய்யப்படுகின்றன.

**சந்திரபோஸ் புனைகதைகளில் சாதிய, வர்க்கச் சிந்தனை** என்ற நான்காமியலில், சாதிய, வர்க்கப் போராட்டக் கருத்துகள் சங்க காலத்திலிருந்தே தமிழகத்தில் இருந்துள்ளது. இவரின் கதைகளில் பார்ப்பனியம் அதிகம் பேசப்படவில்லை என்றாலும் சாதியத்தின் வேர் ஆழமாக வேரூன்றியிருப்பது போன்ற மனநிலையின் வெளிப்பாடு போன்றவைகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. இரத்த உறவுக்குள் பிறசாதி இரத்த உறவுகள் கலப்பதற்குச் சாதியம் மறுப்பதையும், உடைமை வர்க்கத்தினரின் சுரண்டலுக்கு உழைக்கும் வர்க்கத்தினர் பெரிதும் பாதிப்படைவதையும் புனைகதைகளின் வழி ஆராயப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்த கருத்துகள் அந்தந்த இயல்களின் இறுதியில் கூறப்பட்டு இருப்பினும், ஆய்வின் நிறைவினைக் கருத்தில் கொண்டு ஆய்வின் வழி கண்டறியப்பட்ட முடிவுகள் தொகுக்கப்பட்டு இறுதியில் முடிவுரையாக வழங்கப்படுகிறது.

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்வுக்குத் துணையான முதன்மை மற்றும் துணைமைச் சான்றாதாரங்களின் நூல்கள், ஆய்வேடுகள், இதழ்கள் போன்றவற்றைத் தொகுத்து, பகுத்து அகர வரிசைப் படுத்தப் பெற்றுத் துணைநூற்பட்டியலாக ஆய்வின் முடிவுரைக்கு அடுத்த நிலையில் சேர்க்கப்பட்டுள்ளது. கள ஆய்வில் சேகரிக்கப்பட்ட நேர்காணல் செய்திகளும், நிழற்படங்களும் பின்னிணைப்பாக இணைக்கப்பட்டுள்ளன.

நெறியாளர் ஆய்வாளர்

## இயல் – 1

## சந்திரபோஸ் – வாழ்வும் பணியும்

*படைப்பாளன் என்றாலே நினைவுகளின் வழியே இயங்குகின்றவன் என்று சொல்ல முடியும். இளமைப் பருவத்தில் தான் வாழ்ந்த சூழல்; தன்னைப் பாதித்த நிகழ்வுகள்; மனிதர்கள் எனத் தனிப்பட்ட நிலையில் பதிவாகியுள்ளவை ஒருபோதும் வற்றுவதில்லை. வறுமையின் பிடியில் வாழ்க்கை இருந்தாலும் மண்சார்ந்த மனிதர்களைப் பற்றியே அவரின் எண்ணங்களும் செயல்பாடுகளும் இருந்தன. அவ்வகையில், சந்திரபோஸின் வாழ்வும் பணியும் பற்றி விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.*

### பிறப்பும் குடும்பச் சூழலும்

*விருதுநகர் மாவட்டம், மேலக்கோனம்பட்டி என்னும் சிற்றூரில் எளிய விவசாயக் குடும்பத்தில் 07.05.1946ஆம் ஆண்டு பிறந்தவர். அவருடைய தந்தையார் பெயர் ஆண்டியப்பன், தாயார் பெயர் இராக்கம்மாள். அவருடைய மூத்த சகோதரர் பாலசுந்தரராஜ், தமக்கையார் இராசலெட்சுமி ஆவார்.*

*அவர் மதுரை வெள்ளைச்சாமி நாடார் கல்லூரியில்* (PUC) *புதுமுக வகுப்புவரை பயின்றுள்ளார். மணவாழ்க்கையில் விருப்பம் இல்லாமல், கடைசிவரை திருமணம் ஆகாமல் எழுத்துப் பணிக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். இவர் 12.03.2012 அன்று உடல்நலக்குறைவால் இயற்கை எய்தினார்.*

அவருடைய சகோதரர் பாலசுந்தரராஜ் கூட்டுறவுத் தணிக்கைத் துறையில் உதவி இயக்குநராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். சகோதரி இராசலெட்சுமி சமூகநலத்துறையில் சத்துணவு அமைப்பாளாராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார்.

**வாழ்வும் பணியும்**

தமிழகக் காவல்துறையில் அமைச்சுப் பணியாளராக 1969இல் (இளநிலை உதவியாளர்) பணியில் சேர்ந்தார். முப்பத்தி மூன்று ஆண்டுகள் பணியாற்றி 2004ஆம் ஆண்டு ஓய்வு பெற்றார். தனது அகல, ஆழமான வாசிப்பு மற்றும் படைப்புத் திறனால் மிகச் சிறந்த படைப்பாளர்களான ஜெயகாந்தன், பொன்னீலன், ஈரோடு தமிழன்பன், து. இராசா, அசோக் சீனிவாசன், சந்திரகாந்தன், இரா.நல்லகண்ணு, தி. வேணுகோபால், தீபம் கா. பார்த்தசாரதி, அறந்தை நாராயணன், தி.சு. நடராசன், பரிணாமன் போன்றவர்களுடன் நெருக்கமான தொடர்பு கொண்டவர்.

தாமரை, கணையாழி, எழுத்து, ஆனந்தவிகடன் போன்ற இதழ்களில் சிறுகதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள், புதினங்கள், கவிதைகள் என எழுதி வந்துள்ளார்.

அரசுப்பணி, இலக்கியம், பொதுவுடைமை (கம்யூனிசம்), கலை இலக்கியப் பெருமன்றம், திரைப்படத்துறை எனப் பல தளங்களில் பன்னாளுமை கொண்டவராகத் திகழ்ந்தவர். “திரு.சந்திரபோஸ் குறிப்பிடத்தக்க இலக்கிய ஆளுமையாக விளங்கிய தம் எழுத்துத் திறத்தை நம்மிடையே வெளிப்படுத்திக் கொண்டு வந்தவர். புதினம்,

சிறுகதைகள் என வகைப்படும் இலக்கிய ஆக்கங்கள் அவருடைய முதன்மையான களங்களாக இருந்தன.

மக்கள் சார்ந்தப் படைப்புகள் என்னும் தன்மையில் வர்க்கப் பார்வை பிசகாத மார்க்சியக் கண்ணோட்டத்தோடு, சமதர்ம யதார்த்த இலக்கியம் செய்து, இடதுசாரி இயக்கத்தை வலுப்படுத்துபவராகவும், முன்னெடுத்துச் செல்பவராகவும் விளங்கியவர்.

கதையுலகில் ஒரு பெரும் சாதனையாளராக முக்கியத்துவம் பெறுவதற்குரிய காலகட்டத்தில் ஏற்பட்ட அவருடைய மறைவு, பெரும் ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் ஏற்படுத்திவிட்டது.

கலைத்துறையில் அவருடைய ஈடுபாடு பெரிதும் கவனிக்கத் தக்கதாகவும், கருதத்தக்கதாகவும் இருந்து வந்தது. தமிழ்த் திரைப்படக் கதைகள் மீது அவர் செலுத்திய திறனாய்வுப் பார்வை ஒரு பெரும் நூலாக வெளிப்பட்டதை இங்குக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். படைப்பாளி என்ற தோரணையும் விமர்சகன் என்ற பார்வையும் கொண்டு அவர் நிகழ்த்தியுள்ள திறனாய்வுக் கதை அலசல் அத்துறை சார்ந்தவர்களுக்கும் சாராதவர்களுக்கும் பெரும் பயன் நல்கக் கூடியது. எழுத்தாளர் ஒருவர் குறைவாக எழுதி இருந்தால் என்ன? நிறைவாக எழுதியிருந்தால் என்ன? எண்ணிக்கை மட்டும் நமது கவனிப்புக்குரிய அளவுகோல் அன்று. அந்த எண்ணத்தின் பக்கம் நின்று, அவருடைய எழுத்துக்கள் இயங்கி அத்தகைய ஆக்க அதிர்வுகளை ஏற்படுத்தியுள்ளன என்பதே

*மனங்கொள்ளத்தக்கது. இக்கோணத்தில் பார்த்தால் சந்திரபோஸ், தமிழப் படைப்புலகில் சிறந்த இடத்தில் வைத்துப் போற்றத் தக்கவர் என்பது புலப்படும்"*[1] *என்பர் ஈரோடு தமிழன்பன்.*

**பொழுதிறங்கு முன்னே மறைந்து போன ஒரு கருப்புச் சூரியன்**

*மானுடம் பாடிய வானம்பாடி சந்திரபோஸ் ஒரு மார்க்சிய யதார்த்த இலக்கியவாதி என்பதை அவரின் நண்பர்களின் வழி அறிந்து கொள்ள முடிகிறது. அவரை 'பொழுதிறங்கு முன்னே மறைந்து போன ஒரு கருப்புச் சூரியன்' என்கிறார் பொன்னீலன். அவரின் நினைவு குறித்து பொன்னீலன்: "1967-68 காலத்தில் நான் நாகலாபுரத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த போது மதுரை நகரக் கலை இலக்கியப் பெருமன்றத்தோடு எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. வெறும் தொடர்பு அல்ல; வலுவான இலக்கிய ஈர்ப்பு. பேராசிரியர்கள் தி.சு. நடராஜன், கவிஞர்கள் நவபாரதி, பொன்மணி, பரிணாமன் வேல்முருகன், செம்பை மணவாளன், சித்திர பாரதி இவர்களுக்கிடையில் ஒரு கருப்புச் சூரியனாகத் தோழர் சந்திரபோஸ் ஒளி வீசிக் கொண்டிருந்தார்...*

*அடர்த்தியான சுருட்டை மயிர் கண்ணங்கரீரென பிடரி வரை வளர்ந்து கிடக்கும். அவர் பேசும்போது பற்கள் பளீரென மின்னும் கண்கள் விரியும். கைகள் நாட்டிய பாவனையில் அபிநயம் செய்யும் பெரும் உணர்ச்சிக் குவியல் அவர்.*

*கவிதைகளையும், கதைகளையும், கோட்பாடுகளையும் அவர்கள் காரசாரமாக விவாதிப்பார்கள். கருத்துக்கள்*

ஒன்றுக்கொன்று கடுமையாக எதிர்க்கலாம். ஆனால் முகங்களோ மலர்ந்து முறுவலித்துக் கொண்டிருக்கும்”[2] என்பர் பொன்னீலன்.

**பரிணாமன் பார்வை**

முற்றி நின்ற வடிவு. முழுமைநேர் முகம் சந்திரபோஸ் என்பர் பரிணாமன். “முப்பத்தைந்தாண்டுகளுக்கு மேல் எங்களோடு இணைந்து பணியாற்றிய சந்திரபோஸ் எண்ணற்ற சிறுகதைகளைத் தாமரையிலும், இதர பத்திரிகைகளிலும் எழுதி வந்தார்... தொடர்ந்து வாசிப்பு உடைய சந்திரபோஸ் பன்முகத் தன்மை கொண்டவர். தேர்ந்த இசை ரசிகர். விளையாட்டு ரசிகர். கரிசல் வட்டாரத்தில் பிறந்தவர்தான். எனினும் கரிசல் வட்டார வழக்கைத் தாண்டிக் கதைக் களங்களை விரிந்த இலக்கியப் படைப்பாளி. பதவி உயர்வு கருதாத சந்திரபோஸ் மனிதப் பண்பு உயர்வையே கருதினார் என்பதற்கு அடையாளம் - அவர் காவல்துறை அமைச்சுப் பணியில் ஓர் இளநிலை உதவியாளராகப் பணியமர்ந்து, இளநிலை உதவியாளராகவே ஓய்வு பெற்றதைக் குறிப்பிடலாம்.

மகாகவி பாரதியின் வழியிலான தோழர் ஜெயகாந்தனின் வட்டத்திலும் அவரது சபையிலும் நீண்டகாலம் அங்கம் வகித்து நிறை மகிழ்ச்சி கண்டவர் சந்திபோஸ். சந்திரபோஸின் எழுத்தும் நம்பிக்கையும் சமுதாய முன்னேற்றம் சார்ந்தவை”[3] என்பர் பரிணாமன்.

**சந்திரகாந்தன் பார்வை**

*சந்திரபோஸ் குறித்து சந்திரகாந்தன் கூறுகையில், "அவர் கூரிய விமர்சகர்; தனய தாச்சண்யமற்ற விமர்சனம் அவரது. விமர்சனம் மட்டுமன்று; பொதுவாகவே அவர் வெட்டு ஒன்று, துண்டு இரண்டு என்ற பாணியில் பேசுபவர். அவர் யாரையும் - இப்பண்பின் காரணமாக - எளிதில் நெருங்கவிடாதவர். ஆனால், அவர் பேச்சில் பின்னிக்கிடக்கும் நேர்மையை உணர்ந்து நெருங்கி விட்டாலோ பிரிய முடியாதவர். அவ்வளவுக்கு அன்பானவர். அளவிடற்கரிய அன்பும், ஒதுங்கி விட முடியாத கண்டிப்பும் காட்டி ஒரு சகோதர நிலையில் இருந்து என்னை வளர்த்து ஆளாக்கியவர் ஆ. சந்திரபோஸ். வாளால் அறுத்துச் சுடினும் வைத்தியன்பால் மாளாத காதல் கொண்டவன் ஆயினேன் நான்...*

*பிற்காலத்தில், குறிப்பாகப் பணி ஓய்விற்குப் பின் அவரது ஈடுபாடு திசை மாறியது. தியானம், ஆன்மீகம், கடவுளை அறிதல், அடைதல் என அவர் எழுதுவதிலிருந்து விலகிப் போனார். அப்போதும் கூடத் தொடர்ந்து அவரை இலக்கியம் நோக்கித் திரும்புமாறு நான் வற்புறுத்தி வந்திருக்கிறேன். அவர், அவருக்கே உரிய பாணியில் அழுத்தம் திருத்தமாக மறுத்து வந்திருக்கிறார். நாளடைவில் அவரது இறுக்கம் தளர்ந்தது. மீண்டும் பேனா பிடித்தார். என்னைப் போலவே அவரது உற்ற நண்பர்கள், தோழர்கள் அசோக் சீனிவாசன், அப்துல்லா, தவசீலன், வேணுகோபால் ஆகியோரும் இம்மாற்றத்திற்குக் காரணம் எனப் பின்னர் அறிந்து கொண்டேன்...*

குறை ஒன்றுமில்லை... சமூக வாழ்க்கை குறித்து விசாரணைகள் நிறைந்த அவர் தனிமனித வாழ்க்கையில் திருப்தியுற்றே விளங்கினார். அந்த நோய் விளைவித்த துன்பங்களை நீக்கிவிட்டுப் பார்த்தால் அவர், எப்போதும் ஆனந்தச் சுடர் நிலையில் வாழ்ந்த உயிர்கட்கு இனிது செய்தார் என்றே எனக்குப் படுகிறது...

சந்திரபோஸ் எத்தகைய எழுத்துக் கலைஞர் என்பதற்குச் சான்றுகளால் எத்தனையோ சிறுகதைகள், புதினங்கள். சந்திரபோஸ் எத்தகைய சமரசமற்ற தொழிசங்கப் போராளி என்பதற்குச் சாட்சியங்களாய் எத்தனையோ தோழர்கள். சந்திரபோஸ் எத்தகைய கம்பீரமான இலக்கியவாதி என்பதற்குச் சாட்சியங்களாய்த் தோழர்கள் ஜெயகாந்தன், நவபாரதி தொடங்கி நான் உட்பட எத்தனையோ எழுத்தாளர்கள், கலைஞர்கள், கவிஞர்கள், பதிப்பகத்தார்கள்...

எது ஒன்று உறுத்தினாலும், எது ஒன்று மகிழ்வித்தாலும், எது ஒன்று சிந்தனையைக் கிளர்த்தினாலும் பகிர்ந்து கொள்ள சரியா என்று உரசிப் பார்த்துக் கொள்ள அவரிடம் பேச மனது முனைகிறது"[(4)] என்பர் சந்திரகாந்தன்.

**அசோக் சீனிவாசனின் கருத்து**

நியூ செஞ்சுரி புத்தக நிலைய மேலாளர் ஆ. அசோக் சீனிவாசன், மானுடம் பாடிய வானம்பாடியின் நெருங்கிய நண்பர். அவர், "தோழர் சந்திரபோஸ் தனது பின்புலம் குறித்து தன்னுடைய ஒரு அன்னையின் காணிக்கை என்னும் நூலின் முன்னுரையில் எவ்விதத்

தயக்கமுமின்றி வருத்தமின்றி விவரித்திருப்பது எந்த ஒரு எழுத்தாளனும் செய்யாததாகும். அதுவே, அவரை வித்தியாசப் படுத்துவதாகும்.

“கொஞ்சி விளையாடிய
குதூகலப் பொழுதுகள்
எஞ்சிய பொழுதெங்கே
என்று
இதயம் விம்மிட...”

என்ற அவரின் கவிதை வரிகளை நினைவுப்படுத்துகிறார்”[5] அசோக் சீனிவாசன்.

ஓர் எழுத்தாளன் வார்த்தைக்கும் வாழ்க்கைக்கும் வேறுபாடு இல்லாமல் வாழவேண்டும் என்று கருதியவர் சந்திரபோஸ். “எழுதுபவனுக்கு ஒரு நோக்கம் உணடு. வாழ்வுக்கு ஒரு அர்த்தம் இருப்பதைப் போல, தத்துவச் சுமைகளெல்லாம் அவனுக்குக் கிடையாது. பெரிய பெரிய லட்சிய சுமைகளெல்லாம் அவனை மிரட்டுவதில்லை. இதயங்களை வருடும் மனித உணர்வுகளைப் பன்னீர்த் துளிகளாய் அவன் பிறர் மனங்களில் தூவுகிறான். ஒரு நாவலை ஒரு நாளிலோ, ஒன்பது நாட்களிலோ படித்துத் தூக்கிப் போட்டு விடலாம். கதை என்பது எழுத்தாளன் வெறும் பக்கங்களை நிரப்பிச் செல்லும் வேலையல்ல. ஒரு நெடிய வரலாற்றை, அங்கொன்றும் இங்கொன்றுமாய்ச் சிதறிய மணிகளை ஒன்றிணைத்து மாலை தொடுத்து அணிந்து கொள்ளக் கொடுப்பது, தன் அனுபவத்தின் விதைகளைப் பிற மனத் தோட்டங்களில்

அழுத்தமாகத் தூவி விதைப்பது..."[6] என்று எழுத்தாளர்களின் வாழ்க்கைக் குறித்து அவரே கூறுகிறார்.

**தேடல் ஒரு குக்கிராமத்துப் புழுதி மண்ணிலிருந்து...**

சந்திரபோஸ் மானுடம் பாடிய வானம்பாடியாக வலம்வந்த போதும், அவருடைய எழுத்துக்கள் அனைத்தும் அவரின் அனுபவங்களாகவே இருந்துள்ளன. தனக்கேற்பட்ட இனிமையான; கசப்பான அனுபவங்கள்தான் கதைக்களமாக விரிவடைந்துள்ளன என்கிறார்.

குறிப்பாகப் பணி ஓய்விற்குப் பின் அவரது ஈடுபாடு திசை மாறியது. தியானம், ஆன்மீகம், கடவுளை அறிதல், அடைதல் என யதார்த்தத் தத்துவ வாழ்க்கையினை மேற்கொண்டிருந்தார் என்பதற்குச் சாட்சியாக ஓர் அன்னையின் காணிக்கை என்ற சிறுகதைத் தொகுப்பில் தன் வாழ்க்கையின் தேடல்களைப் புரிந்தவராகவே அறியப்படுகிறார். "மனிதன் நினைப்பது ஒன்றும் நடப்பது ஒன்றுமாக வாழக்கூடாது. தவறோ - சரியோ, ஏமாற்று எதனையும் காப்பாற்றாது. பொய் வேஷமிடுவதெல்லாம் வெறும் புகழுக்காக ஆசைப்பட்டே. புகழ் என்பது கூட வெறும் கற்பனைக் கோட்டையே. வெற்று மகிழ்வைத் தரும் விளையாட்டு மணல் வீடே. அது சுயத்தை உயர்த்தாது. அகம்பாவத்தைக் கூட்டும். தனது மெய்யான கணிப்பு ஒரு மனிதனுக்கு இருந்துவிட்டால் அவன் மேன்மையாளனாகி விடுகிறான். சொல்வது எளிது; குறை கண்டுபிடிப்பது எளிது; நிற்க அதற்குத் தக... என்பதே கஷ்டம்...

எவனுக்கு இருக்கிறதோ இல்லையோ - ஒரு எழுத்தாளனுக்கு அந்தப் பண்பு இருக்க வேண்டும். எழுத்தாளன் முன்னுதாரணமானவனாக வாழவேண்டும். ரயில் பெட்டிகளை இழுத்துச் செல்லும் ரயில் எஞ்சினைப் போன்றவன் அவன். அப்படிப்பட்டவர்களாலேயே இலக்கியம் செழுமை பெறும். அப்படிப்பட்ட இலக்கியங்கள் தலைவணங்கி ஏற்றுக் கொள்ளத்தக்கதாக விளங்கும்.

வானமெல்லாம் பிரகாசிக்கும் சந்திர சூரியன்களுக்கு மத்தியில் நான் ஒரு மின்மினிப் பூச்சியைப் போல் கண்சிமிட்டி என் அடையாளத்தைக் காட்டிக் கொள்கிறேன். ஒவ்வொருவரின் அடையாளங்களும் அனுபவங்களும் பெரிது பெரிதாக இருக்கலாம்; கற்பனைகளும் கதைகளும் வளம் பெற்றவைகளாக இருக்கலாம்; எனக்கென்று ஒரு உலகம் இருக்கிறதே... நான் பிறந்த ஓலைக் குடிசை இருக்கிறதே... என்னைத் தாலாட்டிய கரிசல் காட்டின் தென்றல் காற்று இருக்கிறதே... என்னை ஆராதித்த பந்து பந்தான கருவேலம்பூக்கள் இருக்கிறதே... என் பிஞ்சுத்தடம் பதித்த தெருப்புழுதி இருக்கிறதே...

தாகத்துக்குத் தண்ணீர் கேட்ட போது சிரட்டையை என் கையில் கொடுத்து, அதில் தண்ணீர் ஊற்ற என் தாகத்தைத் தணித்த அந்த உயர் சாதித் தாயின்மீது இன்றும் எனக்குக் கோபமில்லை. காளி கோவில் மணியோசை கேட்டு வழிபாட்டிற்கு ஓடிச் சென்ற பாதங்கள், வாடிப்போன பயிராகப் படியேற வழியில்லாமல் வாசலில் நிறுத்திவிட்ட கதைகளெல்லாம் சாரமற்றுப் போய்

விட்டதாக நான் நினைக்கவில்லை. அந்தத் தீண்டத்தகாத டம்ளரை நானே கையில் எடுத்துக் கழுவி ஹோட்டல் எஜமானர்களிடம் டீ வாங்கிக் குடித்துப் பின் சுத்தம் செய்து இருந்த இடத்திலேயே வைத்துவிட்டு, இயலாத நடை தொடுத்து வந்த என் இளமைக் காலப் பொழுதுகளெல்லாம் கூட என் நினைவை விட்டு அகன்று போய்விடவில்லை. அது காட்சிகளும்... சாட்சிகளுமாய்... அதற்குமேல் அதை என்னவென்று அழைப்பது?

என் பிறவிக்கு நானா பொறுப்பு? பின் என் தாய் தந்தையரா பொறுப்பு? இந்த வாழ்க்கை என்னைக் கட்டியணைப்பதற்கும் எட்டி உதைப்பதற்கும் நானா பொறுப்பு? என் பொறுப்பு இதில் எதுவுமில்லை. எவர் பொறுப்பும் அல்லது எதன் பொறுப்பும் இதில் உள்ளதென்றால் எனக்கதில் கவலையும் இல்லை.

மனிதருள் தீண்டத்தகாதவரென்றும் உளரோ? நான் தீண்டத்தகாதவனா? அந்தத் தெய்வத்தின் அருகாமை எனக்குக் கிடையாதா? என்னை விலக்கியடித்தவர்களிலிருந்து நான் விலகி நின்று கொண்டேன். ஆலயப் பிரவேசத்தின் மீதெல்லாம் எனக்கு அக்கறையில்லை. நானும் மனிதன்தான் என்பதை இன்னொருவர் சிபாரிசு செய்து பிரிதொருவரை நம்பச் செய்வதிலா சம்பந்தபட்டவரின் உயர்வு இருக்கிறது?

மனிதன் யார்? மனிதனுக்கான தகுதிகள் என்ன? அவன் உயரம் என்ன? அவன் வெட்டி வீழ்த்த முடியாத சக்தி படைத்ததென்ன?

தெய்வம் என்பது எது? அது எங்கே இருக்கிறது? தெய்வத்திற்கு ஏற்பு உண்டா? மறுப்பு உண்டா?

நான் தேடினேன். ஒரு குக்கிராமத்தின் புழுதி மண்ணிலிருந்தே என் தேடல் தொடங்கியது. திருக்குறளும், பாரதியுமே என் முதல் தேடல். ஜெயகாந்தன் என்றொரு மகா சக்தி. அங்கிருந்தே என் இலக்கியத் தேடல் ஜெயகாந்தன் என்னை இயக்கினார். என் புரிதலுக்கு ஏற்ப... அந்த இலக்கியங்களுக்குள் நான் அமிழ்ந்து போனேன். என் சிந்தனையின் தொடக்கம், என் எழுத்துக்களின் தொடக்கம் அவரைக் கண்டடைந்தது. குப்பைகளைத் தள்ளுவதற்கும், கொள்ளுவதை அள்ளுதற்கும் எனக்கு உறுதுணையாய் அவர் இலக்கியங்கள் அமைந்தன. அவரே எனக்குப் பாரதியின் பல ரூபங்களைக் காட்டினார். உணரச் செய்தார்; புதுமைப்பித்தனையும் உயர் இலக்கியங்களின் திசை வழியையும் அடையாளம் காட்டினார்.

ஒரு தனிமனிதனின் உத்வேகமும், தேடலுமே அவனை உயர்த்த முடியும். வெறும் அறிவு மட்டும் உயர்ந்தால் போதாது. ஆன்மா உயர வேண்டும். கலைஞனின் பொக்கிஷமே ஆன்மாதான். ஒரு அறிவாளியின் அறிதல் வேறு. ஒரு எழுத்தாளனின் தேடல் வேறு. எழுத்தாளனை எவரும் கட்டிப் போட முடியாது; அவனுக்கு விருப்பு வெறுப்புகள் கிடையாது; அவனுக்கு லாப நஷ்டங்கள் கிடையாது; அவன் கோபங்களுக்கு நியாயங்கள் மட்டுமே உண்டு. எழுத்துக்களில் அதற்கு அவன் தண்டனை வழங்குவதில்லை. அவனுக்கு மொழி, இனம், தேசம், எல்லை என்பதெல்லாம் வாழ்வியலை ஒட்டிய ஒரு

வடிவம் மட்டுமே. பிரபஞ்ச சக்தியின் துகள்களாய் அவன் ஆகிப் போனவன். அவன் வானம் வேறு; அவன் எல்லை வேறு; அவன் கனவுகளெல்லாம் வேறு வேறு. சமூகத்தின் ஏற்றுக் கொள்ளல் பற்றியெல்லாம் அவனுக்குக் கவலையில்லை அவனது சமர்ப்பணங்களுக்கு நோக்கங்கள் இல்லை. இலக்கியங்களுக்குக் கூறுகள் இல்லை; வர்ணங்களும் இல்லை.

என் தகுதியை நான் தீர்மானித்துக் கொண்டேன். கனியும் காலம்வரை நான் காத்திருந்தேன். என் உயரத்தை நான் அறிந்து கொண்டேன். எல்லாமும் உண்டு என்ற நிலையுமாய்... ஏதுமற்றது என்ற நிறைவுமாய்... என் பால்ய காலத்தில் எனக்குக் காட்சியளிக்காமல் ஓடி ஒளிந்து கொண்ட கடவுளின் இருப்பிடத்தை நான் கண்டு கொண்டேன். தேடுங்கள் கண்டடைவீர்... என்ற ஞான வாக்கு எவ்வளவு மெய்யானது. தனிமனித ஆளுமை வளர்ச்சியே இந்தப் பிரபஞ்ச சக்தியை மெய்யாலுமே உணரச் செய்யும்.

என்னைத் தாழ்த்தி வைத்த இந்த சமூகத்திற்கு நான் தண்டனை வழங்கவில்லை; என்னை உள்ளே நுழைய விடாமல் தடுத்த கோவில் மீது நான் கற்களை வீசவில்லை; என்னைச் சமமாகப் பாவிக்காமல் எட்ட நிறுத்திய தேநீர்க் கடைக்காரர்மீது நான் குரோதம் கொள்ளவில்லை.

ஏனென்றால் அறியாமல் செய்த பிழைகளை மன்னித்தருள பிதாவிடம் ஏசுவின் வேண்டுதல் பொருள் பொதிந்தது. நான் சமூகப் பார்வையில் உயர்வு தாழ்வற்ற சமநிலை மனிதனாக ஆகிப் போனவன். போட்டியாளர் இல்லாத வளர்ச்சி நிலை அது. ஒரு

எழுத்தாளனின் பாதையே அதுதான். பின்பு எழுத்துக்களின் மேன்மைகளைத்தான் கதைகள் சொல்லுமே.

கம்யூனிஸ்ட் இயக்கம் எனக்குக் கற்றுத் தந்தவை ஏராளம். என்னை உயர்நிலைக்குக் கொண்டு வந்த தோழர்களை இன்றும் நான் நன்றியோடு நெஞ்சில் நிறுத்தியிருக்கிறேன். என்னை எழுத ஊக்கப்படுத்திய தோழர்களும், என் இலக்கியத்தைச் செழுமை செய்த தோழர்களும் இன்றும் என்னை உயிருக்குயிராக நேசிப்பவர்களாகவே இருக்கிறார்கள். இலக்கிய ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் தமிழகம் முழுக்கவும் இருந்த தோழர்கள் ஒன்றிணைந்து இலக்கியப் பயணத்தைத் தொடர்ந்தோம். அந்தக் காலம் ஒரு கூட்டின் உயர்நிலையையும், ஒருங்கிணைப்பின் தத்துவ உயர்வையும் காட்டியது. உள்ளும் புறமுமான ஒழுக்கத்துடன் கூடிய ஒரு தனிமனித வளர்ச்சியே, தத்துவச் சார்பு நிலையைத் தாண்டிய தனிமனித வளர்ச்சியே விருப்பு வெறுப்பற்ற நல் இலக்கியங்களைப் படைக்கும் வளமையைச் சேர்க்கும். அதுதான் ஜெயகாந்தன்"[7] என்கிறார் சந்திரபோஸ்.

**சந்திரபோஸ் என்றொரு மானுடன்**

சந்திரபோஸின் நினைவுகள் குறித்து மதுரை எஸ்.கண்ணன்: "தோழர் போஸ் மனிதநேயமுள்ள, சமூக அக்கறையுள்ள, எளிய மனிதர். மருத்துவத்திற்காக என்னிடம் வந்திருந்தாலும், எங்கள் உறவு அதைத் தாண்டியதாகவே எப்போதும் இருந்தது. நாங்கள் சந்தித்த எல்லா சந்தர்ப்பங்களிலும் எங்களது பேச்சு, சமூகம் பற்றியதாகவோ அல்லது இலக்கியம் பற்றியதாகவோ தான் இருந்தது...

*பொருள் முதல் வாதத்தில் மட்டுமல்ல, ஆன்மீகத் தேடலிலும் அவருக்கு நம்பிக்கை இருந்தது. என்னைப் போன்றவர்களுக்கு அதில் நம்பிக்கையில்லை என்பதையும் அவர் மதித்தார். ஆனால் எந்த நிலையிலும் அவரிடம் போலித்தனம் இருந்ததில்லை. அவர் நினைத்தபடியே வாழ்ந்தார். தன்னுடைய கருத்துகளிலும் உண்மையாக இருந்தார். அவருடைய எழுத்துக்களின் மூலம் இன்றும் தோழர் போஸ் நம்முடன் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்"(8) என்கிறார்.*

**சந்திரபோஸ் எனும் ஆதர்சம்**

*சந்திரபோஸ் குறித்து அவர் நண்பர் எஸ். துரைராஜ், "மதுரைத் தோழர்கள் என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி வட்டாரத்தில் அறிமுகமாகியிருந்த அந்த அணுக்கக் குழுவில் எங்களுடன் ஐக்கியமாகியிருந்தார் அவர். அந்தச் சின்னஞ்சிறு குழு. தனது எண்ணிக்கைக்குக் கொஞ்சமும் சம்பந்தமில்லாமல் எல்லைகளற்ற விரிந்து பரந்த சிந்தனைகளையும் உலகளாவிய பார்வையையும் கொண்டது. மார்க்சீயக் கோட்பாடுகள் எனும் அஸ்திரத்தில் காலூன்றி, மனிதநேயப் பதாகையை உயர்த்திப் பிடித்தவர்கள் அந்தத் தோழர்கள். அவர்தம் தேசியமும் சர்வதேசியமும் முரணிக்கொள்ளாதவை...*

*நான்குமுழ வேட்டி, வெளிர்நீல அல்லது மென்மையான ரோஜா வண்ண சட்டையில் அவர் உருவம் இப்போதும் என் கண் முன்னால். அவருக்குப் பிடித்த ரோஜா வண்ண மையூற்றிப் பேனா; அவரது அழகிய, கலாபூர்வமான எழுத்துக்கள்; அவர் கதை*

சொல்லும் பாங்கு; இலக்கியமாக இருந்தாலும், அரசியலாக இருந்தாலும் தனக்குச் சரி எனப்பட்டதை எந்த சக்திக்கும் அஞ்சாமல் வெளிப்படுத்தும் திறன்; ஜாதி, மத, இன, பிரதேச, பொருளாதார வேறுபாடுகளையெல்லாம் கடந்து நண்பர்களிடமும் தோழர்களிடமும் அவர் காட்டிய நேசம் - இவைகளை நினைக்கும் போது கண்கள் குளமாகின்றன"(9) என்கிறார்.

**மகளின் காணிக்கை**

இந்திரா பிரியதர்சினிக்கு நேருவைப் போல, பிருந்தா ரமணிக்குச் சந்திரபோஸ். அவயத்து முந்தியிருக்கச் செய்த தந்தைக்கு,

என்னைக்
கருவாய் சுமந்தவள் தாய்
உருவாய் சுமந்தவன் நீ...
மழலை பேச வைத்து
மலர்சூட்டி
நகைபோட்டு வண்ண
உடைபோட்டு
அழகுபார்த்த அருந்தவமே!

கம்யூனிசம் கற்றுக் கொடுத்து
கம்பீரமாய் சமூகத்தைப்
பார்க்க வைத்த பகலவனே!

கல்லூரியில் கற்க வைத்து - உன் மனம்
கவர்ந்தவருடன் வாழவைத்து
கலங்கிய போதெல்லாம்
கண்ணீர் துடைத்து
காலம் வரும் மகளே
கலங்காதே என்று சொன்ன கலங்கரை விளக்கமே!

*உன் உள்ளம் நிறைந்த மருமகனை*
*உயர வைத்து - என்னை*
*அரியக்குடியில் அமரவைத்து*
*அன்புப் பேரனை*
*மருத்துவ மாணவனாக்கிவிட்டு*
*உன் கடமை முடிந்ததென்று*
*மரித்துப் போனாயோ? - எங்கள்*
*மகரஜோதியே!*
*என்னை வளர்க்கத்தான் நீ - இந்த*
*பிறவியெடுத்தாயோ?*
*உன்னால் வளர்க்கப்படத்தான் நானும்*
*பிறந்தேனோ?*

*என்னை விழுதாய் ஊன்ற வைத்துவிட்டு*
*ஆலமரமே! நீ வீழ்ந்துவிட்டாயே!*
*பாசக் கயிற்றால் என்னைக் கட்டிப் போட்டுவிட்டு*
*பறந்து போன வானம் பாடியே!*

*ஆசைப்பட்ட தெல்லாம்*
*அள்ளித் தந்த அரும் பெரும் வள்ளலே!*
*நீண்ட நெடுங்காலம் நீ எங்களோடு வாழ ஆசைப்பட்டேன்!*
*அதை மட்டும் மறந்துவிட்டு*
*அவசரமாய் அணைந்து போன அணையா விளக்கே!*

*என் கண்ணீரைக் கண்டால் துடிதுடித்துப் போகும்*
*என் கண்ணொளியே!*
*ஓராண்டு காலமாய் - உன்*
*அன்பு நினைவின் சுமை தாங்க முடியாமல்*
*கடலென கண்ணீர் சிந்துகின்றேனே*
*நீ எப்படியப்பா...*
*கண் மறந்து போனாய்?*

நீ இருந்த போதெல்லாம்
இளந் தென்றலாய் இருந்த உன் அன்பு - நீ
இல்லாத போது தணலாய் தகிக்கின்றதே - அது
காலத்தின் கட்டளையோ?

குறையாத அன்பு தந்து என்
குலம் வாழ வைத்த எங்கள் குல தெய்வமே!
உன் அன்பென்னும்
பாசவலையிலிருந்து மீளமுடியாதச்
சிட்டுக்குருவியாய்..."[10]

என்று மனம் வருந்திக் கவிதாஞ்சலி செலுத்தியுள்ள மகள் பிருந்தா ரமணியின் அன்பு பிணைப்பை நினைக்கும் போது, அவர் உறவுகளிடம் கொண்டிருந்த அன்பும் பாசமும் அளவிடற்கரியதாக விளங்குவதை அறிய முடிகிறது.

**என் உள்ளம் கவர் கள்வன்**

எனக்கும் என் மனைவிக்கும் பிரச்சினை வந்தால் மகள் மீது அளவு கடந்த வாஞ்சையுள்ளவர் என்றாலும் என் பக்கமே அவர் நிற்பார். திருப்புவனத்து நெருங்கிய உறவுகள் சில எங்களை நியாயமில்லாமல் காயப்படுத்திய பொழுது, அரணாக இருந்து, காத்து ஆற்றுப்படுத்தியதை நான் மட்டுமல்ல என் பெற்றோரும், பிறந்தோரும் நன்றியுடன் மறவாமல் உள்ளோம்.

எனக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய பணி உயர்வை குறுக்குப் புத்திக்காரர்கள் தடுக்க நினைத்த பொழுது, தன் தனித்துவத்தால் தன் நண்பர் திருமிகு.து.ராஜா எம்.பி அவர்கள் மூலம் எனக்குப் பெற்றுத் தந்து உயர்வும் மகிழ்வும் அளித்த பெருந்தகை...

இறுதிக் காலத்தில் ஓசோ, ரமண மகிரிஷி இருவரையும் பின்பற்றி யோகியாகக் கட்டுப்பாடுகளுடன் வாழ்ந்தவரை, அவரின் கட்டுப்பாடுகளே அவரின் வாழ்வைக் கட்டுப்படுத்தியதுதான் வேதனை”[11] என்கிறார் மு.பாண்டி.

‘என் உள்ளம் கவர் கள்வன்’ என்று அடைமொழி கொடுத்து தனது நன்றியினைக் காணிக்கை ஆக்கிய மருமகனார் மு.பாண்டியின் எழுத்துக்களிலிருந்து, கமண்டலத்துக்குள் காவிரியை அடக்கிய அகத்திய முனியைப் போல, அந்த ஒற்றை வார்த்தைக்குள் அனைத்தும் அடங்கி இருப்பதை அறிய முடிகிறது.

எஸ்.ஆரோக்கியநாதன் தன் வாழ்த்துரையில், சமுதாயச் சீர்கேடுகளை எண்ணக் கோணல்களை நிமிர்த்தி நேராக்கி பொதுவுடைமைச் சித்தாந்தங்களை ஏற்படுத்த விருதுநகர் மாவட்டம் மேலக்கோனம்பட்டி குக்கிராமத்தில் வித்தானவர் நம் அருமைத் தோழர் ஆ.சந்திரபோஸ் அவர்கள்.

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தில் தம்மை இணைத்துக் கொண்ட பொதுவுடைமைச் சிந்தனையாளனாகிய தோழர் சந்திரபோஸ் அவர்கள் 150க்கும் மேற்பட்ட சிறுகதைகளையும், மூன்று புதினங்களையும் எழுதியுள்ளார். சிவகாசி வெடிமருந்து தொழிற்சாலையின் பாதிப்புகளையும், குழந்தைத் தொழிலாளர்களின் துயரங்களையும், ஜாதீயப் படிநிலைகளால் விளைந்துள்ள கொடுமைகளையும் தம் படைப்புகளில் யதார்த்தமாகச் சித்திரித்துச் சமூக விழிப்புணர்வுக்கும் பொதுவுடைமைச் சிந்தனைகளுக்கும் வழிவகுத்தார்”[12] என்று கூறுகிறார்.

**சந்திரபோஸின் படைப்புகள்**

1. ஆகாசக் கனவுகள் - சிறுகதைகள்
2. ஒரு விடிகாலைப் பொழுதின் சாட்சியங்கள் - சிறுகதைகள்
3. என்றும் நிலைத்தது இந்தப்பாதை - கவிதை
4. தமிழ் சினிமா - சில பார்வைகளும் சில பதிவுகளும் - கட்டுரைகள்
5. ஒரு அன்னையின் காணிக்கை - சிறுகதைகள்
6. நெஞ்சிலாடும் மலர்கள் - புதினம்
7. பிரபஞ்ச கானம் - புதினம்
8. ஐப்பசி மேகங்கள் - புதினம்
9. அந்தச் தலைவாசலுக்குக் கோலமிடுங்கள் - குறும்புதினம்
10. ஜேம்ஸ் வாத்தியார் - சிறுகதைகள்
11. இன்னொரு சாட்சி - சிறுகதைகள்
12. அறிதலும் அடைதலும் - வாழ்வியல் கட்டுரைகள்
13. நந்தியாற்றங்கரைக் கிராமங்கள் கரைசேரும் ஓடங்களும் - (2) குறும்புதினங்கள்
14. தகுதிப் பிழை - குறும்புதினம்

**தாழ்த்தப்பட்டோரும் தமிழிலக்கியமும்**

தாழ்த்தப்பட்டவர்கள் என்கிற போது தமிழகத்தில் குறிப்பிட்ட மூன்று பெரும்பான்மை சாதியினரைக் குறிக்கிறது. பள்ளர், பறையர், சக்கிலியர் ஆகிய இவர்களில் பூர்வீகமாகத் தமிழ் நிலத்தில் தோன்றியவர்கள் பள்ளர்கள் ஆவர். இவர்களுடன் அனைத்து ஒடுக்குமுறைக்கும் அதேசமயம் ஆரியத்திற்கு எதிரான

திராவிடம் வளர்ந்தபோது அடித்தளமாய் அமைந்து வளர்ச்சிக்கு உதவியவர்கள் சக்கிலியர்கள், சில நூற்றாண்டுகளுக்கு முன்பு தமிழகத்தில் குடியேறியவர்கள். தமிழ் மண்ணின் பண்பாட்டுடன் மொழியுடன் இரண்டறக் கலந்தவர்கள். பெரும்பாலும் இம்மக்கள் எது தமிழ் எது தமது பூர்வமொழி என்று பிரித்தறியா வண்ணம் மொழிகளைப் பயன்படுத்துகின்றனர். எனினும் இன்று மேலெழுந்துள்ள இலக்கிய வளர்ச்சியில் முற்றிலும் தமிழ்மொழி மூலம் மட்டுமே தங்களை முன்னிலைப்படுத்திக் கொள்வதொன்றே தமிழின் மீதும் தமிழ் நிலத்தின் மீதுள்ள அக்கறையை வெளிப்படுத்துகின்றனர்.

நீண்ட காலமாக எழுத்தறிவு மறுக்கப்பட்டிருந்த இத்தாழ்த்தப்பட்டவர்கள் கடந்த ஒரு நூற்றாண்டுகளுக்குப் பின்னரே கல்வி பெற ஆரம்பித்தனர். எழுத்தறிவு வழிப்பட்ட இலக்கிய முயற்சி என்பது இத்தாழ்த்தப்பட்ட சாதிகளைப் பொறுத்தவரை மிகவும் குறைவு எனலாம். துணிந்து எழுதத் துணிந்த இலக்கிய முயற்சிகள் யாவும் பார்ப்பனீயர்களால் கடுமையாக அழித்தொழிக்கப்பட்டன.

1980க்குப் பிறகு அதாவது, அம்பேத்கரின் நூற்றாண்டுக்குப் பின்னர், சிறிது சிறிதாகப் பேசப்பட்ட தாழ்த்தப்பட்டோர் விடுதலைக்கான அரசியல் பன்முகப்பட்ட தன்மையில், 1990க்குப் பிறகு ஆழம் கொண்டு, 'தலித் இலக்கியம்' என்கிற புதிய வகை தோற்றுவிக்கப்பட்டது. இக்காலத்தில் தமிழ் இலக்கியத்துக்கென்றே புதிய முயற்சியை முதன்முதலில் தாங்கி வந்தது 'மனுசங்க'

-இதழ்தான். மனுசங்க இதழ் வெளியான பிறகே தலித் இலக்கியம் என்ற பேச்சு அரங்கை விட்டு அம்பலத்துக்கு வந்தது. மனுசங்க பத்திரிக்கையின் துணை ஆசிரியராகப் பணியாற்றியவர் காளிமுத்து என்பார். இவர் மள்ளர் சமூகத்தைச் சார்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்விதழைத் தொடர்ந்து 1992 இறுதியில் 'தலித் பண்பாட்டுப் பேரவை' இலக்கியம், பண்பாடு இவைகளை மையப்படுத்தி அமைக்கப்பட்டது. இம்முயற்சிக்குப் பிறகு 1993-இல் பாண்டிச்சேரியில் நடைபெற்ற 'தலித் கலைவிழா' பல்வேறு வடிவங்களுடன் கொண்டாடப்பட்டதன் பின்பே தமிழிலக்கிய உலகம் கண்ணைத் திறந்தது. நீண்ட காலமாக உறக்கத்திலிருந்த இடதுசாரி இலக்கியவாதிகளும் பார்ப்பனிய எழுத்தாளர்களும் விழித்துக் கொண்டனர். தொடர்ந்து கடைபிடித்து வரும் 'வெண்மணி நினைவுநாள்' (திருத்துறைப்பூண்டி) தலித் இலக்கியத்துக்கும் தலித் அரசியலுக்குமுள்ள இணைப்பை வலியுறுத்தி வருகிறது"[13] என்பர் உஞ்சைராசன்.

தமிழுக்கும் தமிழ்ப் பண்பாட்டிற்கும், சாதியொழித்த தமிழன் வாழ்விற்கும் தங்களை முழுதும் அர்ப்பணித்துக் கொண்டவர்கள் பாவாணர், பாவலரேறு போன்றோரை நினைவு கூறலாம். இன்று தாழ்த்தப்பட்டோர் விடுதலை அரசியலை முன்மொழியும் இதழாக 'மக்கள் தமிழகம்' (தமிழக ஒடுக்கப்பட்டோர் விடுதலை இயக்கம்), 'புதிய தமிழகம்' (அரங்க குணசேகரன் - தமிழக மனித உரிமைக் கழகம்) ஆகிய இதழ்களை வெளியிட்டு வருகின்றனர்.

**மள்ளரியப் போக்கு**

மள்ளரியத்தின் தனித்தன்மையும் முதன்மை நோக்கமும் மள்ளர்களின் சமூக விடுதலையையும் ஒட்டு மொத்த ஒடுக்கப்பட்ட தமிழ்ச் சமூகங்களின் சமூக விடுதலையையும் முன்னெடுத்துச் செல்வதாகும். இதனை, "மள்ளர்களின் சமூகப் பண்பாட்டு வரலாறுகளை தமிழகத்தின் பண்பாட்டு வரலாற்றோடு சேர்த்துக் காணும் மரபு போற்றப்படும். இதனால் மள்ளரியம் இன்னொரு வகையில் தமிழியமும் ஆகும். காரணம் அது ஒடுக்கப்பட்ட தமிழர்களின் சமூக விடுதலை குறித்துப் பேசுவதானால்.

மள்ளரிய இலக்கியங்கள், கொள்கைகள், கோட்பாடுகள், சிந்தனைகள், தத்துவங்கள் அரசியல் ஆகியன தமிழ் இலக்கியப் பரப்போடும் தமிழ் மக்களின் வாழ்வோடும் பின்னிப் பிணைந்து பேசப்படும்.

சாதி மற்றும் இன ஆதிக்கத்தை மள்ளரியம் வேரொடு சாய்க்கும். எல்லாச் சமூகமே சமம் என்ற கருத்தாக்கத்தை வளர்த்து சாதி உயர்வு தாழ்வை மள்ளரியம் இல்லை என்றாக்கும். இதன் மூலம் சாதியம் ஒழிந்து தமிழன் என்ற கருத்தாக்கம் வளர்க்கப்பட மள்ளரியம் கொள்கைகளை முன்வைக்கும்.

எல்லா இனங்களின் பண்பாடும், வரலாறும் அதனதன் நோக்கில் மேலானதே என்ற கருத்தை மள்ளரியம் வலியுறுத்திப் போலிச் சாதிப் பெருமைகளை மோதி மிதித்துவிட்டு எல்லாரும் ஓர் குலம் எல்லாரும் ஓரினம் என்ற உயரிய கொள்கையை வளர்க்கப் பாடுபடும்."[14] என்பர்.

மள்ளரியம் தனது தனித் தன்மையான போக்குகளால் மக்களின் இயக்கமாக முன்னெடுத்துச் செல்ல மள்ளர் இலக்கியங்கள் வழிகாட்டுவனவாக அமைகின்றன.

1995இல் கோவையில் தொடங்கப்பட்ட மள்ளர் மலர் (குருசாமி சித்தர்) என்ற இதழும், 1996இல் வெளிவந்த மள்ளரியமும் இலக்கியமும் என்று நூலும் மள்ளரியத்தின் முன்னோடிகளாகக் காணப்படுகின்றன. "சமூக விழுமியங்களைக் கையகப்படுத்துவதில் இலக்கியத்தின் பங்களிப்பு மிகுதி. சமூக உருவாக்கத்திற்கு இலக்கியம் தேவை. ஒரு சமூகத்தின் பாரம்பரியம் அதன் இலக்கியத்தின் மூலமே பேணிக் காக்கப்பட வேண்டும். தலித் இலக்கியம் அதிக அளவில் பிரச்சாரம் செய்யப்படும் சூழலில் 'தேவேந்திரர் இலக்கியம்' குறித்து நிறைய படைப்புகள் வெளிவரவேண்டும். அட்டவணைச் சாதிகளில் உள்ள சாதிகள் எல்லாம் ஒரே பண்பாடு கொண்டதாகப் பாவிக்க முடியாது. காரணம் தேவேந்திரர்கள் பண்பாடும், வாழ்நிலையும், வாழ்க்கை முறையும், பழக்க வழக்கங்களும் வெவ்வேறானவை. இந்தச் சூழலில் தலித் இலக்கிய எழுத்தாளர்கள் எல்லாம் ஒன்று என்று கூறி சமூக இலக்கியப் போக்கைப் புரிந்து கொள்ளாமல் அவர்களது எழுத்தை முன்னிலைப்படுத்தி 'தலித்' என்ற சொல்லைப் பயன்படுத்திக் குட்டையைக் குழப்புகிறார்கள். பறையர்களால் (ஆதிதிராவிடர்களால்) எழுதப்படுவது தலித் இலக்கியம் என்றால் தேவேந்திரர்களால் எழுதப்படுவது தேவேந்திரர்/ தமிழர் இலக்கியம் தான் என்று வரையறுப்பார்"(15) என்கிறார் தே.ஞானசேகரன்.

மள்ளரியம் தனிநிலை எய்துவதற்கான காரணங்களை ஆராய்தல் வேண்டும். எந்தவொரு சாதிக்கும் எதிரானதல்ல மள்ளரியம் என்ற கருத்தில் உடன்பாடு உடையவராகக் காணப்படுகிறார். மள்ளர் இலக்கியம் மள்ளரின் பெருமையையும், சமூக விடுதலையும் தூக்கிப் பிடிக்க முயற்சி செய்வதற்கு சந்திரபோஸின் புனைகதைகள் உதவுகின்றன. தான் சார்ந்த இனத்தை மேம்படுத்த முனையும் சந்திரபோஸ் ஒருபோதும் பிற சாதியினரை இழிவாகவோ, அநாகரிகமாகவோ எழுதியதில்லை. உடலின் அழுக்கைப் போக்காமல் சட்டையை மட்டும் மாற்றினால் போதும் என்று எண்ணுகின்றவர்களுக்கு மத்தியில் ஒடுக்கப்பட்டவர்களுக்காக, உண்மையான இலக்கிய விழிப்புணர்வோடு சோசலிச யதார்த்தவாதத்தின் முன்னோடியாக சந்திரபோஸ் விளங்குகிறார் என்பது ஆய்வில் பெறப்படுகிறது.

தான் சார்ந்த இனம் குறித்து எழுதினாலும் அதிலும் ஒரு சமத்துவச் சிந்தனையைக் காணமுடிகிறது. பொதுவுடைமைச் சிந்தனையாளரான சந்திரபோஸ், சோசலிச எண்ணத்துடனே தனது கதைக்களத்தை அமைத்துள்ளார். அதனால் பல நேரங்களில் எதிர்ப்புணர்வையும் தாங்கியவராகவும் காணப்படுகிறார். மள்ளர்களுக்கென்று மள்ளரியம் தேவை என்பதை பிறர் உணர்த்தினாலும், சோசலிசம்தான் தேவை என்பதை உணர்ந்தவராகவே கருதப்படுகிறார்.

**மாணவனும் அரசியலும்**

மாணவர்களுக்கு அரசியல் அறிவு அவசியம் வேண்டும் என்று விரும்புகிறார். மாணவர்கள் தங்களது பொறுப்புகளை உணர்ந்து செயல்பட வேண்டும். அரசியலில் ஈடுபடக்கூடாது என்று சில தலைவர்கள் கூறுகிறார்கள். அவர்களுக்கு நானொன்று கூறிக் கொள்கிறேன். வகுப்புகளைப் புறக்கணித்துவிட்டு தேச விடுதலைக்காகப் போராட வாருங்கள். காந்தியடிகள் அன்று அறைகூவல் விடுத்தார். மாணவ சமுதாயம் சமுத்திரமாய்க் கொந்தளித்து எழுந்தது. அது சமூகத்தின் நிலையை உணர்ந்து கொண்ட மாணவப் பொறுப்பு. தேசம் சிக்கலில் சிக்கிக் கொண்டால் மாணவனுக்கு வகுப்பறை தேவையில்லை...”[16] என்று தன் படைப்பின் வழி கூறுகிறார்.

**தொகுப்புரை**

எளிய விவசாய குடும்பத்தில் பிறந்தவர். அவருக்கு ஒரு சகோதரரும், ஒரு சகோதரியும் உள்ளனர். பெற்றோர்கள் ஆண்டியப்பன்-இராக்கம்மாள் தம்பதியாவர். திருமணம் செய்து கொள்ளவில்லை. புதுமுக கல்விப் பயின்றவர்.

தமிழகக் காவல்துறையில் அமைச்சுப் பணியாளராக 1969இல் (இளநிலை உதவியாளர்) பணியில் சேர்ந்தார். முப்பத்தி மூன்று ஆண்டுகள் பணியாற்றி 2004ஆம் ஆண்டு ஓய்வு பெற்றார். இ வ ர் 12.03.2012 அன்று உடல்நலக்குறைவால் இயற்கை எய்தினார்.

ஜெயகாந்தன், பொன்னீலன், ஈரோடு தமிழன்பன், து. இராசா, அசோக் சீனிவாசன், சந்திரகாந்தன், இரா.நல்லகண்ணு, தி.வேணுகோபால், தீபம் கா.பார்த்தசாரதி, அறந்தை நாராயணன், தி.சு.நடராசன், பரிணாமன் போன்றவர்களுடன் நெருக்கமான தொடர்பு கொண்டவர்.

தாமரை, கணையாழி, எழுத்து, ஆனந்தவிகடன் போன்ற இதழ்களில் சிறுகதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள், புதினங்கள், கவிதைகள் என எழுதி வந்துள்ளார்.

இவர் புதினங்கள், குறும்புதினங்கள் மற்றும் சிறுகதைகள் படைத்துள்ளார். கவிதை நூல் ஒன்றும், திரைப்பட விமர்சனக் கட்டுரை நூலும் படைத்துள்ளார்.

இவர் சமகால எழுத்தாளர்களாலும், படைப்பாளிகளாலும் நேசிக்கப்பட்டவர். சோசலிச யதார்த்த இலக்கியம் செய்து, இடதுசாரி இயக்கத்தை வலுப்படுத்துபவராகவும், முன்னெடுத்துச் செல்பவராகவும் விளங்கியவர்.

தன்னைப் புறம்தள்ளிய இந்தச் சமூகத்தையும், மனிதர்களையும் புறந்தள்ளாமல் நேசித்த மனிதராகக் காணப்படுகிறார்.

தான் சார்ந்த இனம் குறித்து எழுதினாலும், அதிலும் ஒரு சமத்துவச் சிந்தனையைக் காணமுடிகிறது. பொதுவுடைமைச் சிந்தனையாளரான சந்திரபோஸ், சோசலிச எண்ணத்துடனே தனது கதைக்களத்தை அமைத்துள்ளார். அதனால் பல நேரங்களில் எதிர்ப்புணர்வையும் தாங்கியவராகவும் காணப்படுகிறார்.

மாணவர்களுக்கு அரசியல் அறிவு அவசியம் வேண்டும் என்று விரும்புகிறார். தேசம் சிக்கலில் சிக்கிக் கொண்டால் மாணவனுக்கு வகுப்பறை தேவையில்லை என்ற கருத்தில் உறுதியுடையவராக இருப்பதும் பெறப்படுகிறது.

**சான்றெண் விளக்கம்**

*1. ஈரோடு தமிழன்பன், ஆ.சந்திரபோஸ் அவர்கள் நினைவு அறக்கட்டளை நினைவு மலர், 2013. ப.5.*

*2. மேலது, (பொன்னீலன்), பக்.23-24.*

*3. மேலது, (பரிணாமன்), பக்.27-28.*

*4. மேலது, (சந்திரகாந்தன்), பக்.18-22.*

*5. மேலது, (அசோக் சீனிவாசன்), பக்.18-22.*

*6. சந்திரபோஸ், நெஞ்சிலாடும் மலர்கள், (ஒரு இலக்கின் திசை வழி) முன்னுரை, ப.11.*

*7. சந்திரபோஸ், ஓர் அன்னையின் காணிக்கை, முன்னுரை, பக்.5-9.*

*8. மதுரை எஸ். கண்ணன், ஆ.சந்திரபோஸ் அவர்கள் நினைவு அறக்கட்டளை நினைவு மலர், 2013. பக்.82-84.*

*9. மேலது, (எஸ். துரைராஜ்), பக்.85-86.*

*10. மேலது, (பிருந்தா ரமணி), பக்.65-67.*

*11. மேலது, (மு.பாண்டி), பக்.68-69.*

*12. மேலது, (எஸ்.ஆரோக்கியநாதன்), பக்.80-81.*

*13. ரவிக்குமார் (தொ.ஆ), தலித் கலை இலக்கியம் அரசியல்,பக்.41-42.*

*14. தே.ஞானசேகரன், மள்ளரியமும் இலக்கியமும், பக்.30-31.*

*15. மேலது, ப.16.*

*16. சந்திரபோஸ், (அந்தக் கடிதம்), ஓர் அன்னையின் காணிக்கை), ப.157.*

## இயல் – 4

## சந்திரபோஸின் புனைகதைகளில் சாதிய, வர்க்கச் சிந்தனை

சாதியின் இறுக்கமான பிடியிலிருந்து சமூகத்தின் விடுதலை என்பதை நூற்றாண்டுகளுக்குப் பிறகும் பெற இயலவில்லை. விளிம்பு நிலையினரின் வாழ்க்கையினைப் பதிவு செய்வதன் மூலம் மையத்தில் உறைந்திருக்கும் அதிகாரத்தின் சமநிலையை இழக்கச் செய்வது நவீன எழுத்தின் முதன்மையான அம்சம் என்று பின் நவீனத்துவம் முன்னிலைப்படுத்துகிறது. பால், சாதி, மொழி என அடங்கி ஒடுக்கப்பட்டவர்களின் குரல்களைப் பதிவாக்குவது இன்றைய தேவை என்பதை மறுப்பதற்கில்லை. இன்னொரு வகையில் பொறாமை, வன்மம், குரோதம், வன்முறை, இழிவுபடுத்துதல் போன்ற அற்பச் செய்திகளை முதன்மைப்படுத்தி எழுதுவது முக்கியம் என்ற கருத்து பரவலாகின்றது. மனித இருப்பின் அவலத்தையும், தடம்மாறும் நிகழ்வுகளையும் புனைவாக்குவது வலுவடைந்துள்ளது. இந்நிலையில், சாதிய, வர்க்கச் சிந்தனைகளைச் சந்திரபோஸ் தமது புனைகதைகளில் எங்ஙனம் கையாண்டிருக்கிறார் என்பதை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### சாதிய சோசலிசப் போராட்டக் கருத்துக்கள்

தமிழ்நாட்டின் சமூக வளர்ச்சியில் தொழிற் பிரிவினையால் தொழில் அடிப்படைச் சாதிகள் தோன்றின. (சங்ககாலச் சாதிகள் தொழிலடிப்படையில் இருந்தன). “சாதிக் கொடுமைகளும், அநீதிகளும், சாதிக் கருவமும், மிகுந்திருந்தக் காலத்தில் அடக்கப்பட்டிருந்த சாதியினர் அவற்றை எதிர்த்துப் பல்வேறு

விதங்களில் போராடியுள்ளனர். இப்போராட்டங்களில் சாதி உயர்வு தாழ்வுகளை நிலைநாட்டப் பயன்படும் கருத்துக்களையும் தத்துவங்களையும் எதிர்த்துப் பல கருத்துக்களையும் தத்துவங்களையும் உருவாக்கினர். இக்கருத்துக்களில் சில பழமையான வேத நூல்களிலிருந்து எடுத்து மாற்றியமைக்கப்பட்டன. சில கருத்துக்கள் வரலாற்றின் மாறுதலுக்கேற்பப் புதுமையாகப் படைக்கப்பட்டன[(1)] என்பர் நா.வானமாமலை.

ஒடுக்கப்பட்டவர்கள் பற்றித் தமிழில் உருவாக்கப்பட்டுள்ள சொல்லாடல்களின் பின்புலமாக இலக்கிய வழியில் பெரிய சாதனைகள் நிகழ்த்தப்பட வேண்டிய தேவை உள்ளது. வெறுமனே சிற்றூர்ப் புறக் காட்சிகளும் ஆதிக்கச் சாதியினரின் அடாவடித் தனமும் ஒடுக்கப்பட்டவர்களின் ஒடுங்குதலும் தொடக்கக் கால ஒடுக்கப்பட்ட மக்களின் புதினங்களில் பதிவாகியிருப்பது ஏற்புடையதே. எனினும் பத்திருபது ஆண்டுகள் கடந்த நிலையில் ஒடுக்கப்பட்டவர்களின் புதினங்கள் புதிய வகைப்பட்ட உத்திகளையும் உள்ளடக்கியதாக மாற வேண்டியுள்ளது.

தமிழ்ச் சமூகத்தில் பெருவெடிப்பாக வெளிப்பட்டுள்ள ஒடுக்கப்பட்டவர்கள் பற்றிய புனைகதைகள் சரியான திசை வழியில் பயணிக்கின்றன என்பதற்கு அடையாளமாக இமையம், சோ.தர்மன், சிவகாமி, பாமா, பொ.வேலுச்சாமி, அ.மார்க்ஸ், ரவிக்குமார், ராஜ்கௌதம், சந்திரபோஸ் போன்றோரின் எழுத்து முயற்சிகள் உள்ளன. ஒப்பீட்டளவில் ஒடுக்கப்பட்டவர்களின் புனைகதைகளின் எண்ணிக்கை குறைவாக உள்ளன.

**சாதிப் பாகுபாடு**

பல பிரச்சினைகளில் தலையானது சாதிக்கொடுமை. மக்களின் பிறப்பு நிலையை வைத்து அவர்களைப் பாகுபாடு செய்தது இடைக்காலத்தில் தான். சாதிகள் இல்லையடி பாப்பா என்று ஏட்டளவிலுள்ள சாதிய உணர்வுகள் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் எழுதப்பட வேண்டும். சாதியை ஒழிப்பதற்கு எத்தனைத் தலைவர்கள் வந்தாலும், அவர்கள் சாதியத் தலைவர்களாகப் பரிணமிக்கின்றனர். நீருபூத்த நெருப்பாகவே இன்று சாதிகள் உள்ளன.

'இருட்டறையில் உள்ளதடா உலகம்; சாதி
இருக்கின்ற தென்பானும் இருக்கின்றானே'

என்று புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் குறிப்பிடுகிறார். சங்க இலக்கியங்களில் சில சாதியினர் 'இழிசினர்' என்று கூறப்படுகின்றனர். ஊசியில் வாரைக் கோர்த்து கட்டில் பிணிக்கும் புலைமகன், துடியை (துடி-உடுக்கை) அறைந்து செய்தியை அறிவிக்கும் துடியன், சுடுகாட்டில் பிணங்களை எரிப்பவர்கள் வெட்டியான், பாசறைக்கண் தண்ணுமை என்னும் போர்ப்பறையை அறைபவன் ஆகியோர் 'இழிசினர்' என்றும் 'இழி பிறப்பாளன்' என்றும் கூறப்படுகின்றனர்.

"துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று
இந்நான கல்லது குடியுமில்லை "(2)

என்று இலக்கியங்கள் கூறுகின்றன. தொழிலின் அடிப்படையில் பிரிவுகளால் பிரிந்த இந்த பாகுபாடு. பின் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளினால் விதைக்கப்பட்டு இன்று ஆணிவேர்களாகச் சாதிகள் மண்ணில் அடித்தட்டு வரை பரவிக்கிடக்கின்றன.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா

செய்தொழில் வேற்றுமை யான்"[3]

என்று வள்ளுவர் கூறுகிறார்.

**சாதியத்தால் ஏற்படும் இழப்பு**

'நந்தியாற்றங்கரை கிராமத்தில்' என்ற புதினத்தில் பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த சாதிக்கலவரத்தின் அச்சத்தின் மிச்சம் இன்றும் உள்ளதை, "நந்தியாற்றங்கரை ஜாதிக்கலவரத்தில் மூன்று பேரை பலிகொடுத்த ஊர் இது... புத்திர சோகம் ரொம்ப பெரிது குருசாமி. நந்தியாற்றங்கரை சாதிக் கலவரத்தில் இருபத்து நாலு வயது மகனை பறிகொடுத்த சோகம் தாங்கிக்க முடியாதது தான். அதான் சொன்னேன் ஒரு இழப்புக்குப் பின்னாலேயும் வாழ்க்கை இருக்குன்னு..."[4] என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது.

சாதிக்கலவரத்தால் இழந்தது உறவுகளை மட்டுமல்லாமல், உயிர் வாழ வேண்டிய உழைப்பையும் அதனால் வரக்கூடிய பொருளாதார ஈட்டலையும் இழந்து தவிப்பதையும் ஆசிரியர் பதிவு செய்துள்ளார். "சாமி, நாங்க காலங்காலமாக ரெட்டியபட்டி பண்ணைங்க நெலத்துல கொத்துக்கு வேலை செஞ்சு பொழைக்கிறவங்க. இப்ப இருவது வருசமாச்சு. இந்த ஊர் ஜனங்களோட பேச்சுப் பேசியே... எங்களுக்கு அவங்க வேலை குடுக்கவும் தயாராய் இல்லை. அவங்க நெலத்துக்கு வேலை செய்யப் போகக்கூடாதுங்கிறது எங்களோட ஜாதிக்கட்டுப்பாடு. நாங்க

எத்தனை நாளைக்கு அரைவயித்துக் கஞ்சிக்கூட கெடைக்காம அலைஞ்சு தவிச்சிருக்கோம் தெரியுமா? கெழக்கேயும் பகை, மேற்கேயும் பகை. எங்க ஊர் சனங்களுக்கும் நெலங் கெடையாது. ஊருக்கு ஊர் ஒத்துமய ஏற்படுத்துங்க. வயித்துக் கஞ்சியாவது ஒழுங்காக் குடிக்க வழி பண்ணுங்க. எப்பவும் போல நாங்க தாயாப் புள்ளையாப் பொழச்சிட்டுப் போறோம். ஓட்டுக் கேட்டு வார மகராசன்மார்கிட்டயெல்லாம் இதச் சொல்லி அழுதுருக்கோம். கவனிப்போம்ன்னு நல்லாத்தான் சொல்லீட்டுப் போறாங்க. யாருமே கவனிக்கலியே...”(5) என்று வயதானப் பெண் குரலின் வழியாக சாதி கலவரத்தில் ஏற்பட்ட இழப்புகளை ஆசிரியர் பதிவு செய்துள்ளார்.

காதலும் வீரமும், ஆண்டான், அடிமைத்தனமும் அனைத்துச் சமூக அமைப்பிலும் தொடர்ந்து நிலவி வந்திருக்கின்றன. கற்காலம், வேதகாலம், புராணகாலம் என்று அனைத்துக் காலங்களிலும் மனிதனைப் பிரித்து வைத்துக் கூறு போட்டு, சிந்திக்கவிடாமல் மனங்களைக் கட்டிப்போட்டும் சம்பிரதாய முறைகளை உருவாக்கி ஒருவிதமான அடிமைத்தனத்துக்குள் மனிதகுலத்தை அடைத்து விட்டிருப்பதை உற்று நோக்கினால் ஆழ்ந்து புரிந்து கொள்ளலாம்.

வர்ணங்கள் என்றும், மதங்கள் என்றும், ஜாதிகள் என்றும், நாடுகளென்றும், அதற்குள் எனது மொழி, எனது ஊர் என்றும் பூமித்தாயின் புதல்வர்கள் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். உயர் வேதங்களை அருளிய மகான்கள் மனித குலத்தைப் பிரித்து ஒரு சீர்குலைவை உண்டாக்க வேண்டும் என்று போதிக்கவில்லை. ஒழுங்குமுறைக் கட்டுமானங்கள் என்ற பெயரில் இடைத்தரகர்களால்

உண்டாக்கப்பட்ட விதிமுறைகள் மனிதனைச் சுயமாகவும், விஞ்ஞான பூர்வமாகவும் சிந்திப்பதற்கு அனுமதிப்பதில்லை.

எல்லாக் காலங்களிலும் அடக்குமுறையிலிருந்து விடுதலைக்காக மனிதகுலம் தங்களுக்குள் எண்ணற்ற போராட்டங்களை நடத்தியிருக்கின்றன. பூமியின் முதல் மனிதன் தோன்றிய நாள்தொட்டு இன்றுவரை மனிதனின் வளர்ச்சி சார்ந்த ஒரு தொடர்ச்சியான நெடிய வரலாறு அவனுக்கு இருந்திருக்கிறது. ஏதோ வெள்ளைக்காரன் அடிமைப்படுத்தியதற்கு முன்பு இந்த தேசம் மிகவும் சுதந்திரமாக இருந்ததாக எண்ணிக் கொள்ள வேண்டாம். சுதந்திர இந்தியாவில் அனைத்து வசதிகளுடன் கூடிய சுயேச்சையான வாழ்வு கிடைத்துவிட்டதாக யாரும் முடிவு செய்யவும் முடியாது.

கல்வியிலும், வேலை வாய்ப்பிலும் ஒடுக்கப்பட்டவர்கள் உயர்ந்த நிலைக்கு வந்தபோதும், அரசாங்கப் பதவிகளிலும், அரசியல் கட்சிகளிலும் பங்கு பெற்றிருந்த போதும், அது ஒருங்கிணைப்பற்ற நிகழ்வாகவேதான் விளங்குகிறதே தவிர, காலம் அவர்களுக்கிழைத்த கொடுமைகளைத் தாண்டி ஒருங்கிணைப்பாக அதைக் கொள்ள இயலாது.

**சாதியத்தின் இறுக்கம்**

ஒரேயொரு சாதி என்று எப்போதும் இருந்ததில்லை. சாதியென்றால் குறைந்தபட்சம் ஒன்றுக்கு மேற்பட்டதாக இருக்க வேண்டும். அப்போதுதான் கீழ்சாதி, மேல்சாதி என படிநிலைப் படுத்த முடியும். சாதியம் கிடைமட்டத்தில் ஆனதல்ல. அது செங்குத்து வரிசையிலானது.

சாதியமானது இங்கு மனிதர்களையும், அவர்களது வாழ்விடங்களையும், இயற்கை வளங்களையும், பொதுச் சொத்துக்களையும், பழக்க வழக்கங்களையும் பண்பாட்டுக் கூறுகளையும் சகலவிதமான உரிமைகளையும், கடமைகளையும் பாரபட்சமாகப் பிரித்துள்ளது. அன்றாட வாழ்வில் மனித சுபாவத்துடன் ஒருவர் மேற்கொள்ளும் அனைத்து நடவடிக்கைகளையும் தீர்மானிப்பதாகவும் கட்டுப்படுத்திச் செலுத்துவதாகவும் சாதியம் இருக்கிறது.

சாதி என்பது இன்னது தானென்று திட்டவட்டமாக ஒரு பருப்பொருளைக் காட்டுவது போல காட்ட முடியாது. அது தனிமனித அளவில் ஓர் உணர்வுதான். ஆனால் ஒரு குறிப்பிட்ட சாதிக்குழுவின் அங்கத்தினர் என்ற முறையில் சாதியானது ஓர் உணர்வு என்பதற்கும் அப்பால் போய் ஒவ்வொரு தனிமனிதருக்குமான கடமைகளையும் உரிமைகளையும் திட்டவட்டமான பாரபட்சத்துடன் வரையறுக்கிறது. இந்த பாரபட்சம்தான் இங்கு ஒருவர் எந்த வர்க்கத்தில் இருக்க வேண்டும் என்பதைத் தீர்மானிக்கிறது.

'நெஞ்சிலாடும் மலர்கள்' என்னும் புதினத்தில் வரும் சதாசிவ ஐயர் தனது மரபுசார்ந்த நம்பிக்கைகள், ஆச்சாரங்களிலிருந்து விலகி வர இயலாதவராகக் காட்டப்பட்டுள்ளார். ஒடுக்கப்பட்ட இனத்தைச் சார்ந்த இளைஞனுக்குத் தனது வீட்டுக்குள் வைத்து உணவு வழங்க அவர் மனம் இணங்குகிறது. அந்த இளைஞனை ஒரு நல்ல மனிதன் என்று அவரது மனம் தயக்கமில்லாமல் புரிந்து

கொள்கிறது. தன் மகள் அந்த இளைஞன் மீது காதல் வயப்பட்டிருக்கிறாள் என்ற உண்மை தெரியும் போது அந்த இளைஞன் அவருக்குத் துரோகியாகப் படுகிறான். உண்ட வீட்டிற்கு ரண்டகம் நினைக்கும் கயவனாகப்படுகிறான். தனது குல தர்மத்தின் மீது இடி விழுந்துவிட்டதாய் அவர் மனம் துடிக்கிறது. ஒரு ஒடுக்கப்பட்டவனின் வீட்டிற்குத் தான் சம்பந்தியாகிப் போவதா என்று அவர் மனம் குமுறுகிறது.

பிராமண மகளாகவும் சேரியின் மருமகளாகவும் மாலதி வாழும் வாழ்க்கை உன்னதமாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. தாங்கள் பிறந்த மண்ணில் தனது சந்ததியினரும், தானும் தனது சாதியினரும் எல்லோரையும் போல் மனிதர்கள்தான் என்று நிரூபணம் செய்வதற்கான போராட்டங்களைப் பல்வேறு வடிவங்களில் அவர்கள் நடத்திச் சென்றதையும், அதில் அமிழ்ந்து ஊமைகளாய் அந்த அடிமைத்தனத்திற்கு ஆட்பட்டுப் போனதையும் இந்த புதினம் விளக்குகிறது.

காதல், வீரம், சமநிலைக்காகப் போராடுதல் என்பதெல்லாம் எல்லா சாதிக்குள்ளும் பொதுவே. எந்தச் சாதிக்கு மேல் எந்தச் சாதி. சமூகத்தில் எந்த இரண்டு சாதிகளும் சமமில்லை என்பது உண்மையாகும். இருந்தபோதிலும் சூத்திரன் என்றழைக்கப்படும் ஒடுக்கப்பட்ட சாதிக்காரன் மட்டுமே இன்றுவரை உயர் சாதி எனப்படும் அனைத்துப் பிரிவினராலும் கேவலமாகப் புறக்கணிக்கப்பட்டிருக்கிறான். "பிராமணர்கள் கொடிகட்டி வாழ்ந்ததையும் தான் கண்டதில்லை. அவர்கள் துவேஷம் கொண்டு

அலைந்ததையும் தான் கண்டதில்லை. காந்தி சொல்வாரே அதேபோல்தான் தானும். தான் சந்தித்த ஊர்களில் பிராமணர்கள் பெரிதான வாழ்வு வாழ்ந்ததாகத் தெரியவில்லை. தாழ்த்தப்பட்டவனைத் தாண்டிய உயர்குலத்தவர்கள் என்று தங்களைக் கூறிக்கொள்ளும் அத்தனை ஜாதிகளுமே... தங்களை சமத்துவமான மனிதர்களாகப் பார்த்ததில்லை"(6) என்ற கதை சொல்லியின் கூற்று அவரின் சோசலிச எண்ணம், அனைத்து உள்ளங்களிலும் பதிந்திருக்க வேண்டும் என்ற உயரிய நோக்கம் தெரியவருகிறது.

எல்லா தகுதிகளும் தனக்குள் இருப்பதாகக் கருதிக்கொள்ளும் ஒற்றைச் சொல் பிராமணியம். எந்த வாயில்களுக்குள்ளும் ஒடுக்கப்பட்டவர்களை நுழையவிடாமல் பார்த்துக் கொண்ட பிராமணியம், சங்ககாலத்தில் தலைவன் தலைவிகளுக்கிடையே வாயில்களாக இருந்தவர்கள் என்பதை மறந்துவிட்டார்கள். எத்தகையச் சூழலிலும் தனது மரபிலிருந்து விலகாமல் வாழும் சதாசிவ ஐயர், உயிரைவிட தனது மரபும் ஆச்சாரமும்தான் பெரியதென்று வாழ்கிறார். "பெற்ற பிள்ளையைவிட தான் ஒரு பிராமணன் என்ற உறுதியே அவருக்குப் பெரியதாகத் தெரிந்தது எனலாம். அம்மா அப்படி இல்லை. மிகவும் இளகிய மனது. அவள் ஒரு பிராமண ஸ்திரியாக வாழ்ந்தாலும் பிள்ளைகள் என்றால் உயிர். பிள்ளைகளுக்காக அவள் எந்தக் கோடுகளையும் தாண்டிவிடுவாள். ஆனாலும் அவள் ஸ்ரீமான் சதாசிவ ஐயரின் தர்மபத்தினியாயிற்றே... நான் ரோஷமான பிராமணன்னு அவகிட்ட போயி சொல்லுங்க

என்று சொல்லி அனுப்பிவிட்டார்...”[7] என்று கூறுவதிலிருந்து பிராமணியத்தின் இறுக்கத்தைக் காணமுடிகிறது.

வயதான காலத்தில் யாரும் கவனிப்பற்ற நிலையில் ஒரு கிருத்துவக் காப்பகத்தில் இருக்கும் சதாசிவ ஐயரின் குணம் மாறாமல் இருப்பதையும் அறியமுடிகிறது. அவரைத் தேடிச் செல்லும் மகளையும், பேரக்குழந்தைகளையும் பார்க்க மறுக்கிறார். “எனக்கேது மகள்? என்று சொல்லியிருப்பாரே. அப்படி சொல்லியிருந்தால் பரவாயில்லையே... அவள் செத்துவிட்டாள். இங்கே எப்படி வரமுடியும் என்று கேட்கிறார்”[8] என்று கதைசொல்லி கூறுவதிலிருந்து தனது ஆச்சாரத்தின் மீது இருக்கும் சாதி இறுக்கம் அறியப் பெறுகிறது.

பொருளாதாரத்தில் முன்னேற்றம் கண்டுவிடுகிற அடிநிலைச் சாதி தனிநபர்கள் மீது தீண்டாமையின் கடுமைதான் குறைகிறதேயன்றி அவரது சாதிக்குரிய சமூகநிலை என்னவோ அதுவே அவருக்கு வழங்கப்படுவதை மறுக்கவியலாது.

ஒவ்வொரு சாதியினரும் தாங்கள் தனித்துவமானவர்கள்; புனிதமானவர்கள் என்று நிறுவதற்காகத் தங்களது சாதியின் தோற்றம் பற்றிய அனேக புனைவுகளை இட்டுக்கட்டியுள்ளனர். இதன் மறுதலையாக இப்புனைவுகள் பிறசாதியினர் பற்றிய இழிவான பார்வையைக் கொண்டிருக்கின்றன. பிறசாதியின் ரத்தம் தன் சாதிக்குள் கலந்து தீட்டுப்பட்டுவிடக்கூடாது என்பதில் ஒவ்வொரு சாதியுமே முனைப்புடன் இருக்கிறது. இதற்காக வகுக்கப்பட்டுள்ள கடுமையான சட்டதிட்டங்களை வாழ்நெறியாக வரித்துக் கொண்டு

வாழும் அடிப்படை அலகாக இங்கு குடும்பம் என்கிற அமைப்பு இருக்கிறது. ஒரே சாதியைப் சார்ந்த ரத்த உறவுகளின் தொகுப்பாகக் குடும்பம் உள்ளது. இந்தக் குடும்பங்களின் தொகுப்பாக சாதி உள்ளது. நெஞ்சிலாடும் மலர்கள் என்ற புதினத்தில் கலப்புமணம் புரிவதை எதிர்க்கும் பார்ப்பனக் குடும்பத்தைக் காட்டியுள்ளார் ஆசிரியர். இவை எல்லா இனங்களிலும் நடைபெறும் யதார்த்த வாழ்வியலாக இருப்பதையும் அறிய முடிகிறது.

இக்கதையில், தன் சாதிக்குள் பிறசாதி ரத்தம் கலப்பதை; அங்கத்தினர் வாழ்க்கைத் துணையாகப் பிற சாதியினர் வருவதைத் தடுப்பதில் குடும்பமே முதன்மையான பாத்திரத்தை வகிக்கிறது. இதன் பொருட்டு ஒவ்வொரு சாதியும் வகுத்துள்ள கட்டுப்பாடுகள் பலவும் பெண்களை ஒடுக்கும் தன்மையுடையவை. ஒடுக்குமுறை என்பதை வன்முறையாக மட்டும் புரிந்து கொள்ள வேண்டியதில்லை. உள்ளங்கையில் வைத்து அல்லது கண்ணின் கருமணி போல காக்கும் அன்பு, பாசம் ஆகியவற்றாலான வளர்ப்பினூடாகவும் ஒடுக்குமுறை நிகழ்கிறது. “மாலு, என் மகளே… என்னையும் இந்தக் குடும்ப கௌரவத்தையும் காப்பாத்துமா.. என்ற ஏக்கத்துடன் நிலைகுலைந்து மகளது மடியில் சாய்ந்தார். மனம் உடைந்த புருஷனின் நிலை சீதாலெட்சுமியின் மனதை வதைத்தது. அவளும் அடக்க முடியாத கண்ணீரால் கன்னங்களை நனைத்தாள்…

…எந்த ஆசாரத்துல நான் உன்னை அவனுக்குத் தாரை வார்ப்பேன். சொல்லு பார்ப்போம். அவன் சேரியில போயி அவனை மாப்பிள்ளை பார்க்க சொல்றியா? கோடு தாண்டி வந்து அவன்

அப்பா அம்மாவை இந்தாத்துல வந்து தட்டு மாத்திக்கச் சொல்றியா? எப்படி உன்னை அவனோட கலந்து போக வைக்கிறது சொல்லுடீ...”[9] என்பதிலிருந்து தன் சாதிக்குள் பிறசாதி ரத்தம் கலப்பதை குடும்ப உறுப்பிர்களே எதிர்க்கும் நிலையை அறிய முடிகிறது.

கிருத்துவ இயக்கம் நடத்தும் காப்பகத்தில் சதாசிவ ஐயர் தங்க வைக்கப்பட்டுள்ளார். “கன்னியாஸ்திரிகளின் பராமரப்பில் அந்த இயக்கம் நடைபெறுகிறது. கர்த்தரின் பெயரில் அந்த இயக்கம் நடைபெறுகிறது. கந்தனின் பெயரில் இயங்குபவர் எப்படி கர்த்தரின் பெயரை ஏற்றுக் கொண்டு உள்ளே அடங்கிப் போனார்”[10] என்ற கேள்வியை சந்திரபோஸ் முன்னுறுத்துகிறார். சந்திரபோஸ் நினைத்திருந்தால் சதாசிவ ஐயர் என்ற பாத்திரத்தை ஏதாவது ஒரு இந்து மடத்தில் சேர்த்திருக்கலாம். ஆனால் அவர் அவ்வாறு செய்யவில்லை என்பதிலிருந்து அவரின் சோசலிச அணுகுமுறையை அறிந்து கொள்ளமுடிகிறது. மதத்தை விட சாதி பெரியது என்பதைச் சொல்லாமல் சொல்லிச் செல்கிறார் ஆசிரியர்.

நெஞ்சிலாடும் மலர்கள் என்ற புதினத்தில் சேரியின் ஒதுக்குப் புறத்தில் தனிமையில் வாழ்ந்து வந்த வெங்கட்ராம ஐயர் என்ற பார்ப்பான் ஏழ்மையில் வாழ்ந்து வருகிறார். ஏழ்மையில் இருந்தாலும் மரபு மீறாத தனது ஆச்சாரத்தோடு வாழ்ந்து வருகிறார். அவர் மரணத்தின் பிடியில் இருக்கும் போது, தனது மகளைச் சேரியில் வாழும் சுந்தரத்திடம் ஒப்படைக்கிறார். பிராமணனின் மகளாகப் பிறந்து சேரியின் மகளாகக் காயத்திரி வளர்கிறாள். அங்கே

அவளுக்குப் பெற்றவர்களும், உடன் பிறந்தவர்களும் கிடைக்கிறார்கள். தான் அநாதை இல்லை; தன் வாழ்விற்கொரு அர்த்தம் இருப்பதாக உணர்கிறாள். அவள் சேரியின் மகளாக வாழ்ந்தாலும் மனைவியாக ஒரு பிராமணனிடம் ஒப்படைக்கப்படுகிறாள். சாதியைத் தாண்டிய உறவின் இணைப்புகள் வழி சோசலிசத்தை உணர்த்துகிறார் ஆசிரியர்.

**புதினக் கதை மாந்தர்கள்**

ஆய்வுக்குட்படுத்தப்பட்ட புதினங்களில் பெரும்பாலான புனைகதைகள் பள்ளர்களின் வாழ்க்கைச் சூழலை முன்வைக்கின்றன. ஆசிரியர் சந்திரபோஸ் தான் சார்ந்த இனத்தை முன்னிலைப் படுத்தியிருப்பது அறிய வருகிறது. ஒடுக்கப்பட்டவர்களின் வாழ்வியலை மற்றவர்கள் பதிவு செய்வதைக் காட்டிலும், ஒடுக்கப்பட்டவர்கள் பதிவு செய்வது அழுத்தமும், அர்த்தமும் நிறைந்ததாகக் கொள்ளப்படும். “சங்க இலக்கியத்தைப் புரட்டும் போது மனசில் பட்ட ஒன்றை இங்கே சொல்லத் தோன்றுகிறது. தொடர்ச்சியாக இந்த இரண்டாயிரம் ஆண்டுகால வரலாற்றிலும் இயங்கி வரும் சாதிகள் இரண்டே இரண்டுதான். ஒன்று பறையர்; மற்றது பார்ப்பனர். இன்று இந்தச் சாதிகளுக்கு என்ன தொழில்கள் ஒதுக்கப்பட்டுள்ளனவோ, அவைதான் அப்போதும் இந்தச் சாதிகளுக்கு ஒதுக்கப்பட்டு இருந்தன. எனவே அந்த வகையிலும் ஒரு தொடர்ச்சியைப் பார்க்கிறோம். பள்ளர் என்று இன்னொரு தாழ்த்தப்பட்ட சாதி அடுத்து தென்படக்கூடிய பழைய சாதிகளில் ஒன்று. சிலப்பதிகாரத்தில் கோவலன், கண்ணகி, கவுந்தி அடிகள்

ஆகியோர் புகாரிலிருந்து மதுரை நோக்கிச் செல்லும் வழியை விவரிக்கும் நாடுகாண் காதையில் செந்நெல் வயல்களைப் பற்றிச் சொல்ல வரும் போது,

'கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரியக்
கருங்கை வினைஞருங் களமருங் கூடி
ஒருங்குநின் றார்க்கு மொலியே யன்றியும்' (சிலம்பு.10:124-126)

என்கிற வரிகள் உள்ளன. இவ்வரிகளுக்கு உரை எழுத வந்த அரும்பதவுரையசிரியர்,

கருங்கை வினைஞர் - பள்ளர், பறையர்
களமர் - உழுகுடி வேளாளர்

எனப் பொருள் உரைக்கிறார் (தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு பக்.259). அடியார்க்கு நல்லார்,

கருங்கை - வலிய கை
வினைஞர் - பள்ளர், பறையர் முதலாயினர்;
களமர் - உழவர் கீழ்க்குடி மக்கள்
கருங்கை இருவர்க்கும் பொது

என உரை எழுதுகிறார் (அதே நூல் பக்.276). எனவே பள்ளர் என்கிற சாதி சுமார் கி.பி.9-10ம் நூற்றாண்டிலிருந்து இந்தப் பெயரில் அழைக்கப்பட்டதெனச் சொல்லலாம். பறையர்களுடன் சமமாகக் கருதப்பட்டவர்களாகவும், விவசாய வேலைகளைச் செய்தவர்களாகவும் இவர்களைக் கருதலாம். இடைநிலையில் இன்று காணப்படும் பல்வேறு சாதியினர் இன்று வழங்கப்படும் பெயர்களில் அன்று வழங்கப்பட்டதில்லை"[11]என்பர். "பள்ளர்கள் தம்மை தேவேந்திரகுல வேளாளர்கள் என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

அவர்கள் இந்திரலோகத்தில் இருந்து நெல்லும் கரும்பும் கொண்டு வந்தவர்கள் என்றும் இதனால் பாண்டிய மன்னனால் சிங்காதனத்திலிருத்திப் பாராட்டப்பட்டவர்களென்றும் அவர்களுடைய சாதி வரலாறுகள் கூறுகின்றன."[12] பள்ளர்கள் குறித்தப் பல ஆய்வுகள் தற்போது வெளிவந்துள்ளன. (பள்ளர்களைப் பற்றி சாதி வரலாற்று நாட்டுப் பாடல்கள் முழுமையாகக் கிடைக்கவில்லை. ஆயினும் தி.நா.சுப்பிரமணியன் தொகுத்த தென்னிந்தியக் கோயில் சாசனங்கள் மூன்றாவது தொகுப்பில் திருமலை நாயக்கர் காலத்தில் பள்ளர்களுக்கும் பறையர்களுக்கும் இடையே ஏற்பட்ட உரிமை வழக்குகளில், மன்னன் தீர்ப்பு வழங்கிய செய்திகள் காணப்படுகின்றன. அச்சாசனங்களில் காணப்படும் கதைகள் பள்ளர்களது மரபு வழிப்பட்ட வரலாற்றுக் கதைகளின் அடிப்படையில் எழுந்தனவாக இருத்தல் வேண்டும்.)

**அடக்குமுறைகளும் அத்துமீறலும்**

எங்கும் தொழில் நுட்ப ஆதிக்கம் ஆழமாக ஊடுருவும் வேளையில் கிராமத்தில் ரத்த உறவு காரணமாக ஏற்படும் பாரதூரமான விளைவுகள் முக்கியமானவை. வீரப்ப நாயக்கரின் பரம்பரை, ஊர் அபிமானம், சாதிப்பெருமை, பாரம்பரியம் போன்ற நிலமானிய மதிப்பீட்டில் எல்லோரும் பணிந்து போகின்றனர். அதிகாரத்தின் பெயரால் அடக்குமுறைகளும் அத்துமீறலும் மனித உடல்களை வாதைக்குள்ளாக்குகின்றன.

யதார்த்தக் கதைசொல்லல் மூலம் 'நெஞ்சிலாடும் மலர்கள்' என்ற புதினத்தில் கதைசொல்லியின் சொல்லாடல் மெலிதாக

இருப்பினும் மனிதர்கள் ஏதோ ஒன்றின் பெயரால் தங்களுக்குள் விலங்கு மாட்டிக் கொண்டதை அறிய முடிகிறது. “துப்பாக்கியைத் தோளில் ஏந்தி, வலது கையை வேகமாக வீசி தூரத்தில் கண் வைத்தபடி நடந்து செல்வார் பட்டத்து வீரேந்திர நாயக்கர். தலையில் தலைப்பாகை கையில் தங்க வளையம், முழங்கைக்கு மேலே ஒரு கையில் வெள்ளி நெளிவு. கருகருவென்று அரும்பிய மீசை. அது அவரது பிராயம். எவரையும் மதிக்காக பார்வையின் அலட்சியம். எதிர்ப்பட்டோருக்கு விலகி இடம்கொடுக்காத பரம்பரை மமதை அவை எப்போதும் இயக்கி வரும்”(13) என்பதிலிருந்து வீரேந்திர நாயக்கரின் பண்புநலன் அறிய வருகிறது.

அவ்வாறான வீரபத்திர நாயக்கரின் முன் ஒடுக்கப்பட்டவர்கள் ஒடுங்கியே மரியாதை செய்ய வேண்டும் என்கிற அடாவடி அரிப்பு அவரிடம் எப்போதும் உண்டு. “கீழ்ச் சாதிக்காரர்கள் யாராக இருந்தாலும் அவருக்கு எதிரே செல்லும் போது, தலைப்பாகையை அவிழ்த்துக் கையில் வைத்துக் கொண்டுதான் போக வேண்டும். சற்று தள்ளி நின்று ‘கும்புறேன் சாமி’ என்று ஒரு கூழைக்கும்பிடு போட்டுவிட்டுதான் போக வேண்டும். அது போன்ற மரியாதைக்குத் தலையை மட்டுந்தான் அசைத்துவிட்டுச் செல்வார் நாயக்கர். சில நேரங்களில் தலையசைப்பு கூட இருக்காது”(14) என்பதிலிருந்து அவரின் அதிகாரத் தோரணையை அறியமுடிகிறது.

வீரபத்திர நாயக்கரின் தந்தை பூசாரி ஜக்கப்ப நாயக்கர். மகன் பதினாறடி தாண்டினால், தந்தை அதற்கும் குறைவாகத் தாண்டுவதில்லை என்பதை அவரின் சாதிய இறுக்கத்தின் வழி

உணரலாம். “அவரது தந்தை பூஜாரி ஐக்கப்ப நாயக்கர் பழுத்த பழம். முத்துப் போட்டு குறி பார்ப்பார். ஐக்கம்மா வாக்கு சொல்லுவார். தட்சணை வைத்துவிட்டுப் பத்தடி தள்ளி நிற்க வேண்டும். நாடாராய் இருந்தாலும், தேவராய் இருந்தாலும், பிள்ளையாய் இருந்தாலும் அவரது வீட்டு வாசற்படி வரை வரமுடியாது. ஹரிஜனங்கள் அவர்வீட்டு வாசலில் கூட நிற்க முடியாது”(15) என்று அவரின் சாதி ஆணவத்தின் அரிச்சுவடி எழுதப்பட்டிருப்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

அவர்களின் தீண்டாமையின் உச்சமாக, “வெற்றிலை கூட கடைகளில் வாங்கமாட்டார்கள். கடைக்காரர்களின் வீட்டுத் தண்ணீர் அதில் பட்டிருக்குமாம். சிவகாசி சாத்தூரில் கட்டுகளாக வாங்கி வந்து - நன்றாக இரண்டு மூன்று முறை ஐக்கம்மா தேவிக்கு வைத்துவிட்டு, பிறகு அந்த வெற்றிலையை எடுத்து மெல்வார்கள் ”(16) என்ற கருத்தை நோக்கும் போது தீண்டாமையின் ஒட்டு மொத்த வடிவத்தினைப் பெற்றவர்கள் போல் உள்ளனர்.

இவர்களின் வழிபாட்டு முறைகளை இவர்கள் மட்டுமே மேற்கொள்ள வேண்டும். இவர்கள் வழிபாடு முடித்தவுடன் அனைத்து சாதியினரும் மறுநாள் காணிக்கையுடன் வந்து அவர்கள் தரும் ஐக்கம்மா திருநீறும், மையும் வாங்கிக் கொண்டு செல்ல வேண்டும். ஒடுக்கப்பட்டவர்களுக்கென்று தனி இடம் உண்டு. அவர்கள் வீட்டின் பின்புறம் வாசலில் நிற்க வேண்டும். அவர்கள் தரும் பிராசாதத்தைப் பயபக்தியுடன் பெற்றுக் கொண்டு செல்ல வேண்டும். அந்த ஊரில் அனைத்துச் சாதியினரும் தங்களுக்குக் கீழ்

என்ற எண்ணத்துடன் வாழ்ந்து வருகின்றனர். இவர்களை மீறி யாரும் எதையும் செய்யக் கூடாது. அவ்வாறு செய்வதாக இருந்தால் தங்களின் அனுமதி பெற்றப் பிறகே செய்ய வேண்டும் என்ற எழுதப்படாதச் சட்டங்களை உறுதிப்படுத்தியிருந்தனர். “ஒரு நாள் பள்ளர் குடியிருப்பு காளிகோவிலில் கொட்டுக்காரர்கள் கச்சைக் கட்டி ஆடுகிறார்கள் என்ற தகவல் பெரிய நாயக்கருக்குப் போய் விட்டது. தகவலைக் கேட்டதும் வெகுண்டெழுந்துவிட்டார் பெரிய நாயக்கர். கைகட்டி வாய் பொத்தும் சாதிக்காரங்களுக்கு வந்த வாழ்வா இது? நான் இருக்கிற ஊர்ல என்கிட்ட அனுமதி கேட்காம கச்சை கட்டிடானுகளா? அவ்வளவுக்கு ஆளாகிப் போயிட்டாங்களா அந்தப் பயக... என்ற வசை மொழியோடு தனது அங்கவஸ்திரத்தை அடர்ந்த தலைப்பாகையாகக் கட்டிக் கொண்டு வேகமாக வந்திருந்தார்”[17] என்பதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

பெரிய நாயக்கரின் அதிகாரத் திமிறினைக் காந்தியின் தாத்தா குமராண்டித் தட்டி கேட்கிறார். அவரின் எதிர்ப்புக் குரலால் பெரிய நாயக்கர் எதுவும் பேசாமல் சென்றுவிடுகிறார். அடங்க மறு; அத்துமீறு என்ற நிலை வருகின்ற பொழுது, அடிமைச் சங்கிலிகள் அறுபடும் என்பதை ஒடுக்கப்பட்டவர்களின் வாயிலாக அறிவிக்கும் சந்திரபோஸ், அநியாயத்திற்கு எதிராக இவர்கள் அநியாயம் செய்ததாகக் காட்டவில்லை. சமத்துவத்தை நோக்கி இவர்களின் கால்கள் நடக்க விரும்புகின்றன என்பதைச் சொல்வதன் மூலம் ஆசிரியரின் சோசலிச யதார்த்தவாதம் புலப்படுகிறது.

**செய்தொழில் வேற்றுமையான்**

செய்தொழில் வேற்றுமையான் என்பதிலிருந்து, தொழில்கள் பலவாயினும், செய்தலால் இழிவில்லை. அனைவரும் செய்ய மறுக்கும் தொழிலைச் செய்யக் கட்டாயப்படுத்துவது ஏற்புடையதல்ல. ஒருநாள் நாயக்கர் இறந்துவிடுகிறார். பள்ளர்கள் அவருக்குப் பாடை கட்டுவதற்காகப் பணிக்கப்படுகிறார்கள். அதை அவ்வூர் இளைஞர்கள் மறுக்கிறார்கள். இறந்தவர்களுக்காகக் குழி வெட்டி, பாடை கட்டுதல் காலங்காலமாய் நடந்துவந்த இழி செயலை மறுத்து, அவர்களே அதைச் செய்ய வேண்டும் என்று எதிர்வாதம் புரிகிறார்கள். இதைக்கேட்ட நாயக்கர்களுக்குப் புதிதாகவும், புரியாததாகவும் இருக்கிறது. "குழி வெட்டுறதுக்குன்னு எந்தச் சாதிக்காரனும் பிறக்கல. மரியாதையாய்ப் போயிடுங்க என்று கூச்சல் போட்டான் காந்தி. அங்கே காந்தியின் அப்பா சுந்தரம் ஓடிவந்தார். யப்பா, பரம்பரை பரம்பரையா செய்யுறதுதான். அவங்க ஒரே குடும்பம். இதை ஒரு உதவி மாதிரி செய்தா குறைஞ்சு போகமாட்டோம்... என்று பழைய நியாயத்தைப் புதுப்பிக்க முயற்சிக்கிறார்.

ஐயா, நீங்க பேசாம இருங்க. சாதிக்கு சாதி உதவலாம். நாயக்கர் நமக்கு பாடை கட்ட வருவாரா? அந்த அந்நியோன்யம் அந்தக் குடும்பத்துக்கும் இருந்தா தாராளமாய்ச் செய்வோம். ஏதோ இவங்க எட்டாத உயரத்துல இருக்கிற மாதிரியும், இருக்கிறவன் இவங்களைத் தாங்கணுங்கிற மாதிரியும் நடந்தா உதவி அடிமைத்தனமாப்

போயிடும்… என்ற காந்தியும் ஆக்ரோஷமான குரலோடு அந்த வழக்கம் அவர்களது மறுப்பின் அடையாளமாய் மலை ஏறிவிட்டது.

நம்ம சாதிக்காரனுக்கு மட்டும் பிணம் எரிக்க குழி வெட்டன்னு வேற சாதிக்காரன் தேவைப்படலாமா? என்றொரு கேள்வியை மற்றவர்களின் வெறுப்புணர்வுகளுக்கு இடையே எழுப்பினார் சுந்தரம்.

எந்தச் சாதிக்காரனும் யாருக்கும் அடிமை கிடையாது. மனுஷங்க விரும்பாத எந்த விஷயத்தையும் அவங்க மேல திணிக்க முடியாது. தன் கையே தனக்கு உதவி. ஒருநாள் அப்படித்தான் வரும். நம்மை மேல் சாதிக்காரன் அடிமைப்படுத்துறான்னு கூப்பாடு போடுறோம். நாம மட்டும் இன்னொரு சாதிக்காரனை அடிமைப்படுத்த நினைக்கலாமா? தந்தைக்கும் மகனுக்குமாய் நடந்த அந்த விவாதத்தில் தந்தை பின் வாங்கி வீட்டுக்குப் போய்விட்டார்”(18) என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து யாவரும் சமம் என்ற அவரின் சோசலிச மனப்பாங்கு தெரியவருகிறது.

காலம் ஒரே மாதிரியாக எல்லோருக்கும் கை கொடுத்து நிற்பதில்லை. சிந்திக்க மறுப்பவர்கள் சிதறிப்போவதும் - மாற்றங்களைப் பின் தொடர்ந்து நடப்பவர்கள் கரையேறிச் செல்வதுமாய்; நிகழ்வதைப் புரிந்து கொள்வதற்கே ஒரு மாற்றம் தேவைப்படுகிறது என்ற கதைசொல்லியின் கருத்தின் வழியாக, தங்களுக்கெதிராகச் செயல்படுபவர்களுடன் மோதலை விடுத்து, அறம் சார்ந்து நிற்பதே வீரம் என்று, சாதி சமத்துவப் போராட்டக்

கருத்துக்களைக் கொண்டு கதை நகர்த்திச் சென்றிருப்பது அவர் சோசலிச யதார்த்தவாதி என்பதை மீண்டும் ஒருமுறை உறுதிப் படுத்தியுள்ளார்.

பள்ளர்களைப் பிணம் எரிக்க, பிணக்குழித் தோண்ட நிர்பந்திக்கும் நாயக்கர் சமூகத்தினர், பள்ளர் சாதியினருக்குப் பிணக்குழித் தோண்டுபவர்களை; பாடை கட்டுபவர்களை ஏன் மேல் சாதியினர் வற்புறுத்தவில்லை என்பதை ஆசிரியர் கூறத் தவறிவிட்டார். பள்ளர் தவிர்த்த வேற்று சாதியினரைக் கதைக்களத்தில் காண இயலவில்லை. "நம்ம சாதிக்காரனுக்கு மட்டும் பிணம் எரிக்க குழி வெட்டன்னு வேற சாதிக்காரன் தேவைப்படலாமா? என்றொரு கேள்வியை மற்றவர்களின் வெறுப்புணர்வுகளுக்கு இடையே எழுப்பினார் சுந்தரம்"(19) என்று கதையில் பேசப்படுகிறது. கதை வழி சென்று கொண்டிருந்தவர் யதார்த்த வாழ்வியலுக்குள் நுழைந்துவிட்டார் ஆசிரியர்.

நெஞ்சிலாடும் மலர்கள் என்ற புதினத்தில் பெருமாள்சாமியும் தேவியும் காதலிக்கிறார்கள். பெருமாள்சாமி பள்ளர் சாதியைச் சார்ந்தவன். தேவி, சாதி பிடிப்புள்ள பட்டத்து வீரேந்திர நாயக்கரின் மகள். காந்தி என்ற பாத்திரத்தின் வழியாக, காதலைத் தாண்டி நிகழக்கூடிய சிக்கல்களை எடுத்துரைக்கிறார் ஆசிரியர். நாடகக் காதலில் இன்புறுவதற்காக எதை வேண்டுமானாலும் நிகழ்த்திக் காட்டலாம். ஆனால், உண்மையான வாழ்க்கையில் யதார்த்தத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். இதனை, "காதல் வரலாம் தம்பி. இடம் எப்படி இடம்ன்னு தெரியுமில்லை. பாதிக்கப் போறது நீங்க ரெண்டு

பேர் மட்டும் இருக்காது. சாதிக்கு சாதி இருந்த அந்நியோன்யங்களும்கூட பாதிக்கும். உங்களை நான் அதைரியப்படுத்தல. எல்லா விஷயங்களையுமே நீங்க தெரிந்து கொள்ளணும்... என்று காதலைத் தாண்டிய பிரச்சினைகளையும் காந்தி பெருமாள்சாமியிடம் எடுத்துச் சொன்னான்"[20] என்கிறார் ஆசிரியர்.

மேலும் ஆசிரியர், "ஒரு ஆணுக்கும் பெண்ணுக்குமாக நேரும் உறவு ஒரு குடும்பத்திற்கும் இன்னொரு குடும்பத்திற்குமான பகையைத் தாண்டி ஒரு ஊருக்கும் இன்னொரு ஊருக்கும், ஒரு ஜாதிக்கும் இன்னொரு ஜாதிக்கும், ஒரு தாழ்ந்த ஜாதிக்கும் ஒரு உயர்ந்த ஜாதிக்குமான, மான அபிமானப் பிரச்சனைகளாய் அது உருமாற்றமானதெல்லாம் தனிக்கதை"[21] என்று யதார்த்தத்தைப் பிரதிபலிக்கிறார்.

**அடக்குமுறையும் எதிர்ப்புக் குரலும்**

எதிர்ப்பு என்பது இசைவின்மை, உடன்படாமை, மறுத்தல், மறுதலித்தல் என்று பொருள்படும். ஒடுக்கப்பட்டவர்கள் சாதிக் கருவத்தினை எதிர்த்துப் பல்வேறு விதங்களில் போராடி வந்துள்ளனர். நெஞ்சிலாடும் மலர்கள் என்ற புனைகதையில் நாயக்கர்களால் ஒடுக்கப்பட்ட சாதியைச் சார்ந்தவர்கள் படும் வேதனையைச் சொல்லி மாளாது. நாயக்கர், நாயக்கச்சி இடும் ஒவ்வொரு ஏவலையும் கட்டாயம் செய்திட வேண்டிய அவலம். "திடீரென்று சீனிவாசக நாயக்கரின் மனைவி, அடிப்பாவி, என்ன

காரியம் செய்துட்ட என்று கூப்பாடு போட்டுக் கொண்டு ஓடிவந்தாள். எல்லோரும் வேலை செய்வதைப் போட்டுவிட்டு என்னவோ ஏதோ என்று திகைத்துப் போய் நின்றனர்.

பேச்சியம்மாளின் மகள் சீனிவாசக நாயக்கரின் மனைவி கொண்டு வந்த ஒரு செம்பில் வைத்திருந்த தண்ணீரை எடுத்துக் குடித்துவிட்டாளாம். என்ன மப்பு இருந்தா தண்ணிய எடுத்துக் குடிப்ப நாயே... அடியே பேச்சி... கொஞ்சம் விட்டா எங்க வீட்ல வந்து சம்பந்தம் பேசிடுவீங்க போல... என்று சொல்லிக் கொண்டே அந்த பச்சை மண்ணைப் போட்டு முதுகிலும் கன்னத்திலும் ஓங்கி ஓங்கி அடித்தாள். அந்தப் பிள்ளை தண்ணீர் குடித்து எச்சில் படுத்திய செம்பைக் கடுங்கோபத்துடன் காலால் உதைத்துத் தூக்கி எறிந்தாள்.

ஐயோ அம்மா... அடிக்காதீங்க வலிக்குதே.... வலிக்குதே என்று துடியாய்த் துடித்தது. அம்மா தாயி. நாங்க எளிய சாதிதான். உங்க செம்பைத் தொட்டு எம்புள்ள தண்ணி குடிச்சது குத்தந்தான் தாயி. அடிக்காதீங்க தாயி, உங்களை கையெடுத்துக் கும்புடுறேன்.... என்று கண்ணீரை வடித்துக் கெஞ்சிக் கூத்தாடினாள். உங்களுக்கு ஒரு புது செம்பு வாங்கிக் குடுத்துர்றேன்.... என்று சொன்ன பிறகும் சீனிவாசக நாயக்கர் மனைவியின் கோபம் தணிய வில்லை"[22] என்கிறார் ஆசிரியர்.

தண்ணீர் குடித்தக் குற்றத்திற்காக பேச்சியம்மாளைத் தோட்ட வேலையிலிருந்து வெளியேற்றுகிறாள் நாயக்கரம்மாள். எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தும் அவள் இரங்குவதாகத் தெரியவில்லை.

செல்லியம்மாளும் அவளுக்காகப் பரிந்து பேசுகிறாள். "என்னடீ, உன் சொந்தக்காரின்னு ஒனக்குப் பொத்துக்கிட்டு வருதா... சாதி சின்னச் சாதின்னாலும் நெனப்பு மட்டும் பெரிய நெனப்பு இருக்கு... என்று செல்லியம்மாளின் வார்த்தைகளைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் சர்வ அலட்சியம் செய்தாள் நாயக்கரம்மாள்.

தனக்குள் இருக்கும் நியாயத்தையும், தன் மனதில் பொங்கிப் பிரவகித்த கோபத்தையும் மனதுக்குள்ளேயே கரைத்து பஸ்பமாக்கிக் கொண்டாள் செல்லியம்மாள். இந்தப் பச்சை மண்ணைப் போட்டு இந்த அடி அடிக்கிறாளே... இவள் விளங்குவாளா? என்று அவள் மனம் ஒருவேளை நாயக்கரம்மாவை சபித்திருக்கலாம். அல்லது இந்த ராங்கி ஏறுன சிரிக்கிக்கு நாயக்கரம்மா செம்புத் தண்ணி கேக்குதாக்கும் என்று பேச்சியம்மாளின் அடிபட்ட மகளைத் திட்டியிருக்கலாம். இரண்டுமே மனதுக்குள் கரைந்து போனதாகத்தான் நிகழ்ந்திருக்க வேண்டும்"[23] என்று கதை சொல்லியின் யதார்த்தம் அறிய முடிகிறது.

அடங்கி ஒடுங்கிய மக்கள் பொங்கி எழுந்துவிட்டால் பிரளயம் தாங்காது. ஊருக்குள் இந்தச் செய்திப் பரவியவுடன், மக்கள் தங்களுக்குள் பேசிக் கொள்கிறார்கள். பேச்சியம்மாளின் கணவன், சீனிவாசக நாயக்கரைப் பார்த்துப் பேசி விட்டும் வந்துவிடுகிறான். பின்னர், முத்துக்கருப்பனால் சீனிவாசக நாயக்கர் கடுமையாகத் தாக்கப்படுகிறார். "காந்தியின் மனதுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. நேற்று அந்தக் குழந்தையை நாயக்கரம்மா அடித்ததும் அந்தக் குழந்தை கூப்பாடு போட்டுக் கதறியதும் அவன் மனதைத்

தொட்டது. மனதில் ஏற்பட்ட ஏதோ நிகழ்வுகளால் கண்களில் கண்ணீர் பொங்கிக் கொண்டு வந்தது. அந்தச் செயலின் நியாயமும் நியாயமற்றதும் அவனுக்கு விளங்கவில்லை. அடுத்த நாள் நாயக்கரை முத்துக்கருப்பன் கதறக்கதற அடித்ததும் நாயக்கர் அலறியடித்து ஓடியதும் அவனுக்கு வேடிக்கையாகத் தெரியவில்லை. நாயக்கரின் அழுகை அவன் மனதைத் தொட்டது. அவன் அழுதான்"[24] என்ற கதைசொல்லிக் கூறுவதிலிருந்து ஆசிரியரின் சோசலிச மனமும், அதனுள் இருக்கும் யதார்த்தமும் புரிகிறது. '*கைத்துப்பாக்கிகளும் வெடிகுண்டுகளும் ஒரு போதும் புரட்சியைக் கொண்டுவராது. சிந்தனை என்னும் பட்டறைக் கல்லில் புரட்சி என்னும் வாள் தீட்டப்பட்டுக் கூர்மையடைகிறது*' என்ற பகத்சிங்கின் கூற்று இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

ஒருவன் கீழ்ச் சாதிக்காரனாய் பிறப்பதற்கும் மேல் சாதிக்காரனாய் பிறப்பதற்கும் அவனவன் காரணமல்ல. எந்தச் சாதிக்காரனாய் இருந்தாலும் தடி எடுத்தவன் தண்டல்காரனாய் ஆக அனுமதிக்கலாகாது என்று கூறும் கதைசொல்லியின் உள்ளம் சோசலிசத்தை நோக்கிப் பயணிக்கிறது என்பதை உணர முடிகிறது. "தலித் விடுதலையின் முதற்கட்டம் தலித்துகள் தங்கள் இழிநிலை குறித்த பிரக்ஞை அடைவது. இத்தகைய விழிப்புணர்வு தோன்றும் இடங்களில் தான் தீண்டாமைப் பிரச்சினைகள் உருவாகின்றன. தலித்துகள் மத்தியில் போர்க்குண மிக்க எதிர்ப்புகள் கீழ்க்கண்ட நிலைகளில் தான் தோன்றுகின்றன. (அ) தலித்துகள் உயர் சாதியினரைச் சார்ந்து நிற்கும் நிலை ஒப்பீட்டளவில் குறைந்திருக்கக்

கூடிய விவசாயக் கட்டமைப்பு உருவாகியுள்ள நிலை (உதாரணம்: தென் தமிழ் நாட்டில் பள்ளர்கள்) (ஆ) தலித்துகள் மத்தியில் நீண்ட கல்விப் பாரம்பரியம் உள்ள நிலை. (இ) அம்பேத்கர் இயக்கங்கள் செயல்படும் இடங்கள். (ஈ) தாழ்த்தப்பட்டவர்கள் முற்றிலும் விவசாயக் கூலிகளாகவும், உயர் சாதியினர் நில உரிமையாளராகவும் இருந்து சாதிய முரணும் வர்க்க முரணும் ஒருங்கிணைந்துள்ள நிலையில் கூலிப் போராட்டங்கள் தோன்றும் இடங்கள் (உதாரணம்: கீழ்த்தஞ்சை)"[25] என்ற அ.மார்க்ஸின் கருத்தியலோடு ஒத்தியங்குகிறார் சந்திரபோஸ்.

**இரட்டைக் குவளை**

எல்லோரும் மனிதர்கள், இவர்களுக்கு மட்டும் சிரட்டையில் தேநீர். உலகெங்கும் இல்லாத நடைமுறை இந்தியாவில் மட்டும், அதுவும் சுதந்திரம் அடைந்த பிறகு தலை தூக்கித் தாண்டவம் ஆடிய நாட்களை ஆசிரியர் பின்னோக்கு உத்தியாகக் கையாண்டுள்ளார். அவர் வாழ்ந்த பகுதியில் உள்ள உணவகங்களில், குடிக்கும் குவளைகளில் 'பள்' என்றும், மற்றொன்றில் 'பறை' என்றும் மூன்றாமதில் 'சக்' என்றும் எழுதியிருப்பதாகக் கூறுகிறார். அந்தந்தக் கீழ்ச் சாதிக்காரர்கள் அவர்களுக்குரிய குவளைகளை எடுத்து நீட்டினால் காபியை ஊற்றுவார்கள். குடித்துவிட்டு அவர்கள் ஊற்றும் தண்ணீரில் கழுவிவிட்டு அடுத்த ஆளிடம் கொடுக்க வேண்டும். இல்லையென்றால் கழுவிக் கவுத்தி வைத்து விட வேண்டும் என்ற அவலத்தையும் அந்த ஊரில் இரட்டைக் குவளை முறை உள்ளதையும் அறியமுடிகிறது.

கதையின் நாயகன், தன் தந்தையும் மற்றவர்களும் உயர் சாதியினரைப் போன்று மதிப்போடு தேநீர் அருந்துவதற்கு வழியில்லாமல் போய்விட்டதே என்று கவலை கொள்கிறான். சிரட்டையில் தேநீர் குடித்தது பற்றி அவர்களுக்கு எந்தக் கவலையும் இல்லாமல் இருப்பதைக் கண்டு மனம் துடித்துப் போகிறான். இதைத் தட்டிக் கேட்பதற்கென முத்துக்கருப்பன் என்ற பாத்திரத்தை ஆசிரியர் படைக்கிறார்.

**வர்க்கச் சிக்கலும் தீர்வும்**

காலங்காலமாய் அடங்கிப் போனவர்கள் அடக்கமாகவே பேசுகிறார்கள். “ஏம்பா கத்தற, கூச்சல் போடுறதுனல எந்த மாத்தமும் வராதுப்பா. அந்த மனுசங்களோட இன்னைக்கு நேத்தா பழகுறோம். ஏதோ காலங்காலமாக நாம கீழ் சாதியா இருக்கோம். மனுசங்கள ஒரு நாளையில முகம் முறிக்கிறது சரியாகவா இருக்கும்?”(26) என்று சுந்தரத்தின் வாயிலாகக் கூறுகிறார். பிறகு அவர்கள் இரட்டைக் குவளை முறையை ஒழிப்பதற்காக மந்திரியைப் பார்த்து மனு கொடுக்கச் செல்கின்றனர். மனுவைப் பார்த்த மந்திரி அதற்குத் தீர்வும் கூறுகிறார். “ஐயா, நீங்க நினைக்கிற மாதிரி சாதி வித்தியாசங்களை மந்திரம் போட்டு உடனே ஒழிச்சிற முடியாது. மெதுவாக கொஞ்சம் கொஞ்சமா மாறும். அதுக்குக் கல்வியறிவு வேணும். அந்த மாதிரி கடைகளை நீங்க பகிஷ்காரம் பண்ணுங்க... நாங்களும் நடவடிக்கை எடுக்கிறோம்...”(27) என்று கூறுகிறார்.

ஒரு எதிர்பார்ப்பு ஏமாற்றமாகிற போது அது கரைதாண்டுகிறது. அல்லது கரையை உடைக்கிறது. அது இன்னொரு படிப்பினையும், இன்னொரு போராட்டக் காலத்தையும் அல்லது இன்னொரு சலசலப்பையும் உருவாக்குகிறது அல்லது வலுசேர்க்கிறது என்ற கதைசொல்லியின்படி போராட்டம் தொடங்குகிறது. "மனசாட்சி, பகுத்தறிவு ஆகியவற்றைச் சுட்டிக்காட்டி போராட்டம் நடத்துவதன் மூலம் அநீதியைத் தணிக்க முடியுமே தவிர அதை ஒழித்துக்கட்டிவிட முடியாது. அநீதியை ஒழித்துக் கட்ட வேண்டுமானால் அதை எதிர்த்துப் போராட வேணடும். அநீதிக்குக் காரணமாக இருப்பது ஒரு கூட்டு அதிகாரம் என்றால், அதனை அதிகாரத்தைக் கொண்டேதான் எதிர்த்துப் போராட முடியும். ஏற்கனவே நிறுவப்பட்டுள்ள தனது அதிகாரத்திற்குப் பின்னால் தன்னை நிலைநிறுத்திக் கொண்டுள்ள ஒரு வர்க்கத்தை, அதற்கு எதிராக அதிகாரத்தைப் பயன்படுத்தாமல் அகற்றிவிட முடியாது. ஆக, வலுவானவர்கள் வலுவற்றவர்களைச் சுரண்டுவதை நிறுத்துவதற்குள்ள ஒரே வழி இதுதான்"[(28)] என்று அம்பேத்கர் கூறுவதும் நோக்கத்தக்கது.

ஒரு எதிர்ப்பு வருகின்ற போது எதிர்த்துப் போராடும் தாய்க் கோழியின் உறுதிப்பாடு எவ்வளவு உணர்வுப் போராட்டமாக மாறுகிறது. அதைப் போல, எதிர்க்க வேண்டிய நேரத்தில் எதிர்க்க நினைப்பது அநாகரிகமல்ல என்பதை, "அப்போது அடிக்கும் உபாயத்தைக் காந்தியின் மனம் ஏற்றுக் கொண்டது. காந்தியின் மனது அதை ஏற்றுக் கொள்ளவில்லையென்றாலும் அது நடைபெறவே

போகிறது. தாங்கள உதாசீனப் படுத்தப்படுகிறோம் என்ற கொந்தளிப்பை நிராகரிக்க அவன் மனம் ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால் மற்றும் ஒரு கேள்வியை அவன் மனம் கேட்டுக் கொண்டது. இந்தத் தீண்டாமை நமது கிராமத்தில் மட்டும் இல்லை. நமது கிராமத்தில் ஒரு ஐந்து ஹோட்டல்களைப் பலவந்தமாக முடச் செய்துவிட்டால் தாங்கள் எதிர்பார்க்கும் சுதந்திரம் கிடைத்து விட்டது என்றோ எல்லோரும் மனமாற்றம் அடைந்து விட்டார்கள் என்றோ ஆகிவிடாது என்ற கருத்துகள் அவனது சிந்தனைக்கு நெருக்கடி கொடுக்கும் போது அவன் ஒட்டுமொத்தமான காலத்தின் விடுதலையையே விரும்பினான்...

கடைக்காரர்கள் பறிமாற மறுத்திருக்கிறார்கள். ஒரு பெருமூச்சில் நிலை கொண்ட ஆவேசத்தை அந்தக் கடைக்காரர்களால் எதிர்கொள்ள முடியவில்லை. நாங்க என்னையா கொறஞ்சுட்டோம். உங்க வீட்டுப் படி தாண்டி வந்து சாப்பாடு கேட்டமா? உங்ககிட்ட சம்பந்தம் பேசினமா? கடையத் திறந்து யாவாரம் பண்ணுறீங்க. ஊருக்காரங்களை எல்லாம் ஒண்ணா உக்காரவச்சு ஒண்ணா மண்ணா கூத்தடிக்கிறீங்க. எங்க ஆத்தாமாருக எங்களையும் பத்து மாசம் சொமந்துதான் பெத்தாளுங்க... என்ற அவர்களின் கோப ஆவேசத்தை ஹோட்டல்காரர்களால் எதிர்கொள்ள இயலவில்லை.

கடைகள் அடித்து நொறுக்கப்பட்டன. வெளியே வந்து கடைக்காரர்களுக்கு அவர்கள் ஒரு எச்சரிக்கை செய்துவிட்டுப் போய்விட்டார்கள். திரும்பவும் கடையதிறந்தா ஒண்ணாக்

*குடுக்கணும் இல்லைன்னா கொலை விழுகும்... அவர்கள் கலைந்து சென்றுவிட்டார்கள்"[29] என்று ஆசிரியர் கூறுகிறார். சுதந்திர நாட்டில் ஏற்றத் தாழ்வற்ற சமுதாயம் அமைய வேண்டும் என்ற கருத்தை நிலைநிறுத்தியுள்ளார் ஆசிரியர்.*

*"ஓடப்ப ராயிருக்கும் ஏழை யப்பர்*
*உதையப்ப ராகிவிட்டால், ஓர்நொ டிக்குள்*
*ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி*
*ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப் பாநீ!"*

*என்பர் பாரதிதாசன். இந்த பூமியில் கொடுமை கண்டு ஏழைகள் எழுந்துவிட்டால் எந்த அடக்குமுறையும் அடங்கிவிடும் என்பது சரித்திரம். "தலித்துகளின் போராட்டங்கள் பெரும்பாலும் கலாச்சாரத் தளத்திலான உரிமைப் போராட்டங்களாகவும் (எகா. தனி டீ கிளாஸ் எதிர்ப்பு, சுடுகாட்டுப் பாதை உரிமை) கூலிப் போராட்டங்களாகவும் தான் வெளிப்படுகின்றனவே ஒழிய நிலத்திற்கான போராட்டங்களாகத் தலித் போராட்டங்கள் வெடிப்பதில்லை"[30] என்ற அ.மார்க்ஸின் கூற்றும் கவனிக்கத்தக்கது.*

**சமுதாய மக்களாட்சி**

*1949 நவம்பர் 24ஆம் நாள் முழுமை பெற்ற அரசமைப்பு சட்டத்தை சமர்ப்பித்துப் பேசிய அம்பேத்கர், இந்தியாவில் அரசியல் மக்களாட்சி வந்துவிட்டது. ஆனால் சமுதாய மக்களாட்சி இங்கு இல்லை. சமுதாய அமைப்பில் சமத்துவமான மக்களாட்சி நிலை இல்லையென்றால் அரசியல் மக்களாட்சி வெகுநாளைக்கு நீடிக்காது. இந்த நாட்டில், பிறப்பின் அடிப்படையில் ஏற்றத்தாழ்வுகள்*

உண்டாக்கப்பட்டு விட்டன. அதேபோல் பொருளாதாரத் துறையில் செல்வச் செழிப்பில் வாழ்பவர்களின் உல்லாசபுரியும், ஏழ்மைச் சேற்றில் அழுந்தி உணவில்லாமல், உடையில்லாமல் அல்லற்படும் ஏழைகளின் சேரிகளும் அடுத்தடுத்து இருக்கின்றன. இது சமத்துவல்ல என்று கூறிய அவரின் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

ஜனநாயகம் சிறப்பாக இயங்க சில அடிப்படை அம்சங்கள் தேவை. சோசலிசமும் சுதந்திரமும் ஜனநாயகத்தின் முக்கிய அடிப்படைத் தத்துவங்கள். அதாவது, ஜனநாயக அரசாங்கமானது, தன் மக்கள் அனைவருக்கும் சமூக, பொருளாதார வாய்ப்புகளை சமமாக ஏற்படுத்தித் தர வேண்டும்.

சமுதாயத்தில் உள்ள எல்லாவிதமான ஏற்றத் தாழ்வுகள் நீக்கப்படும் என்பதில் தொடங்கி, தொழில் வளர்ச்சியும், பொருளாதார வசதிகளும் ஒரு சிலரிடம் குவிந்துவிடுவதைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்பதுவரை, பல்வேறு கோட்பாடுகளை மக்களாட்சி மலர்வதற்காக அரசியலமைப்புச் சட்டத்தில் எழுதி வைத்திருந்தாலும், அவை நிறைவேற்றப்படவில்லை. குறிப்பிட்ட மக்களின் வாழ்க்கை நிலை பெரிதாக உயரவில்லை என்பதோடு, இருந்த வசதிகளும்கூட நாளுக்கு நாள் சரிந்து வருகின்றன என்பதே உண்மை.

‘நெஞ்சிலாடும் மலர்கள்’ என்ற புதினத்தில் ஒடுக்கப்பட்ட இனத்தவர்களைப் பற்றி விவரித்த ஆசிரியர், ‘குத்தி பகடை’ என்ற சிறுகதையில் பிற சாதியினரின் சோசலிசத்தையும் விவரித்துள்ளார்.

குத்தி பகடை ஒரு நாள் இறந்து விடுகிறான். அவன் இறந்தது தெரியாமல் அவன் மகன் அருகில் விளையாடிக் கொண்டிருக்கிறான். இனி அவனின் சேவை தங்களுக்குக் கிடைக்காது என்று எண்ணி ஒவ்வொருத்தரும் வருத்தப்படுகிறார்கள். ஊரில் யார் இறந்தாலும் தப்படித்து ஊருக்குச் செய்தி சொல்பவன். இவன் இறந்த செய்தியை சொல்வதற்கு ஆளில்லை. ஊரை நம்பியே வாழ்ந்த இவனுக்குச் சொந்தம் என்பது யாரும் கிடையாது என்பதுகூட இந்த ஊர் மக்களுக்குத் தெரியாது. அதுதான் அவர்கள் அவன் மீது வைத்த அக்கறை.

மங்களசாமியின் மகன் தான் குத்தி பகடையை மற்ற மனிதர்களைப் போல வாழ வேண்டும் என்று கூறுவான். "இந்தா பாரு குத்தி, உனக்கு எத்தனை நாள் சொன்னாலும் தெரியாதா? இப்படி ஊரில் கஞ்சியெல்லாம் வாங்கக் கூடாதய்யா. எல்லா மனுஷங்களைப் போல நீயும் மனுஷன்தான். மற்றவங்களை சாமி, எஜமான், மகாராஜா - இப்படியெல்லாம் ஏன் அழைக்கிற. ஐயான்னு சொல்லு. அதுவே பெரிய மரியாதை. உன்னை மற்றவங்க தாழ்த்திப் பேசும்படியா வச்சுக்காதே! நீயே இப்படி வந்து நின்னா மத்தவங்க உன்னை இளக்காரமாத்தானே நினைச்சுருவாங்க..."(31) என்று கூறுவான்.

அதற்கு அவன் எந்த மரியாதையும் தனக்கு வேண்டாம் என்று மறுத்துவிடுவான். பகடையின் சாதிக்காரர்களில் படித்தவர்கள் எல்லோரும் மரியாதையாக நடத்தப்படுகிறார்கள் என்று கூறினாலும் வாழ்க்கையின் யதார்த்தத்தைப் புரிந்து கொண்டவன் போல வாழ கற்றுக் கொண்டவன்.

அவனும் ஒருகாலத்தில் பெரிய மனிதனாகத்தான் வாழ்ந்தவன். முன்னூறு குடும்பங்கள் வாழும் அந்த ஊரில், ஒடுக்கப்பட்டவர்கள் ஐந்து குடும்பத்தைச் சார்ந்தவர்கள். ஐந்து பங்காகப் பிரிந்து களம் அடிப்பது, செருப்புக் கட்டுவது, ஏவிய வேலைகள் செய்வது, நல்லது கெட்டதுக்குச் செய்தி சொல்லி போதல் போன்ற வேலைகளைச் செய்து வந்திருக்கிறார்கள். அதில், குச்சப்பன் மகன் ரெங்கப்பன் பகடை இராணுவத்தில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். அவ்வூரின் சாதிக் கொடுமைக்காக எதிர்த்து நிற்கிறார். மாடு திருடிவிட்டார் என்று பொய்க் குற்றச்சாட்டுக் கூறித் தண்டிக்கின்றனர். அதனை எதிர்த்துத் தட்டிக் கேட்கிறார் மங்களசாமி. இவ்வூரில் வாழ்வதைக் காட்டிலும், எங்காவது சென்று இறந்து விடலாம் என்று கூறி தனது குடும்பத்தினருடன் அவ்வூரைவிட்டுக் காலி செய்து சென்றுவிடுகிறார்.

ஆனால், குத்தி பகடை மட்டும் அவ்வூரில் இருந்து களம் அடிப்பது, இழவு சொல்வது, பாடை கட்டுவது, தீச்சட்டி எடுப்பது, செய்து வருகிறான். குழி தோண்டிப் பிணம் புதைப்பது, பிணம் எரிப்பது போன்ற வேலைகளைச் செய்து வந்தான். அவனுடைய மனைவியும் காசநோயால் இறந்துவிடுகிறாள். இப்போது அவன் இறந்துவிட்டான். அவனைப் புதைப்பதற்குக்கூட ஆட்கள் முன்வரவில்லை. "அடே! ஊர்ல இருந்து ருவா குடுத்துர்றோம். இந்த ஆலமரத்துல நாலு குச்சி வெட்டி இந்த குத்திப்பயல இப்படியே தூக்கீட்டுப் போயி பொதச்சிருங்கடா. அதான் முடிவு... இது நாட்டாண்மைக்காரரின் கட்டளையாக இருக்கிறது. குத்தி

பகடையை சகல மரியாதையோடவும் தூக்கிப் போடணும் மாமா. அவன் என்ன கொள்ளி வைக்கிறதுக்குப் புள்ளையில்லாமலா போயிருக்கான்? வெடுக்கென்று இடை மறித்தான் மங்களசாமியின் மகன்.

அட அப்பனும் புள்ளையுமா பொணத்த ஒங்க வீட்டுக்குத் தூக்கீட்டுப் போகணுங்கிறீங்களா? என்றார் நாட்டாண்மைக்காரர்.

நீங்க எதுக்கெடுத்தாலும் ஏன் இப்படிக் கோவப்படுறீங்க? அவனை அவனோட குடிசை வீட்டுக்குத் தூக்கீட்டுப் போயி - இதுவரைக்கும் நம்ம ஜாதிக்காரங்களை என்ன மரியாதைகளோடு இவன் கொண்டு போய் சுடுகாடு சேர்த்திருக்கிறானோ - அதே மரியாதையை நாமும் இவனுக்குஞ் செய்யணும் என்றார் மங்களசாமி."[32]

குத்தி பகடைக்குச் செய்ய வேண்டி மரியாதையெல்லாம் செய்து அவனுடைய பாடையை ஊர்மக்கள் சேர்ந்து எடுத்துச் செல்கின்றனர். இதில் மங்களசாமிதான் முன்னின்று பாடையைத் தூக்கிச் செல்கிறார். அவனுடைய ஐந்து வயது மகன் சுடலைக்குத் தீ மூட்டுகிறான். ஆதரவற்ற அச்சிறுவனை மங்களசாமி அணைத்துக் கொள்கிறார். "குத்தி பகடையின் சிதை கொழுந்து விட்டு மேலே எகிறி நெருப்புக் கோளமாய் எரியத் தொடங்கியது. அந்த நெருப்பு ஒளியில் அந்தச் சிறுவனுக்குத் தலை சிரைக்கும்படி உத்தரவிட்டார் மங்களசாமி."[33] மங்களசாமி என்ற பாத்திரத்தின் வழி மனிதநேயத்தையும் சோசலிச யதார்த்தத்தையும் ஆசிரியர் கதை வழியே வலியுறுத்துகிறார். சோசலிசம் அனைவரின் மனதிலும் நிலை

கொள்ள வேண்டும் என்பதே சந்திரபோஸின் எண்ணமாக இருந்திருக்க வேண்டும் என்பதையே இது காட்டுகிறது.

அந்த விடியலின் போது என்ற சிறுகதையில் சாதி கடந்த மனிதநேயத்தை முன்னிறுத்தியுள்ளார் ஆசிரியர். சாதிச்சண்டை உச்சத்தில் தன்னுடைய ஒரே மகனைப் பறிகொடுத்துவிட்டுப் பழி வாங்கும் எண்ணத்தோடு வீச்சரிவாளோடு இருக்கும் நாகலிங்கம், தன் வீட்டில் இரண்டு அனாதைப் பெண்களுக்கு அடைக்கலம் தருகிறார். அவர்கள் தன் எதிரியின் பெண் குழந்தைகள் என்று தெரிந்த பிறகு, சரியான சந்தர்ப்பம் வந்தது என்று கோபம் கொப்பளித்து நிற்கிறான்.

ஆனால், ஓர் உயிருக்கு ஓர் உயிர் என்று பழி வாங்க நினைத்தால் இவ்வுலகில் யாரும் நிம்மதியாக வாழ முடியாது என்று நினைக்கிறான். நாகலிங்கத்தின் எதிரி புலிவீரன் தன் பிள்ளைகளைத் தேடி வருகிறான். அவர்கள் அடைக்கலப் பொருளாக நாகலிங்கத்தின் வீட்டில் பத்திரமாக இருப்பதை எண்ணி, தன்னுடைய செயலுக்கு வருத்தப்படுகிறான். “அய்யா... என் தெய்வமே... திக்கெட்டும் கேட்கும்படியாகக் கடல் கொந்தளிப்பதைப் போல் கதறி அழுதபடி நாகலிங்கத்தின் பாதங்களில் விழுந்து ஆரத்தழுவினான்...

அய்யா... ஏழு ஏழு ஜென்மம் எடுத்தாலும் இந்தப் பாவிக்கு மன்னிப்புக் கெடையாதய்யா... என்னோட ஏழுமலையானே நீங்கதான். என்னோட ஏழுமலையானே நீங்கதான் என்று கூறியபடி தலையை அவரது பாதத்தில் வைத்து ஓங்கி ஓங்கி அடித்தான் புலிவீரன்.

நீங்க செய்திருக்கிற உபகாரம் சாமானியமானது இல்லை. அதுபோல சாதிப் போரால நானு தனிப்பட்டு உங்களுக்குச் செய்திருக்கற துரோகம்... அடடா என்றவன் என்ன நினைத்தானோ என்னவோ எழுந்து நின்றான்.

மடியை விலக்கிச் செறுகி வைத்திருந்த கூர்மையான பிச்சுவாக் கத்தியைக் கையில் எடுத்தான்.

அய்யா இந்தாங்க பிச்சுவா. உங்க கையாலே என்னைய ஒரே குத்தா குத்திருங்க. அதுதான் எனக்கு நிம்மதியான சாவு என்று புலம்பினான் புலிவீரன்.

அடச்சீ... என்று அசட்டையாகக் கூறிய நாகலிங்கம், அவன் கையில் வைத்திருந்த பிச்சுவாக் கத்தியைப் பிடுங்கித் தெருவில் எறிந்துவிட்டு, கத்தி வச்சிருக்கானாம் கத்தி. தூர எறிடா இத... என்று கூறிக் கொண்டே அவர்களை வழி அனுப்பி வைத்தார்"(34) என்று கதைசொல்லியின் கூற்றின் வழி, சாதிச்சண்டைக்கு முற்றுப்புள்ளி வைக்கிற சோசலிச யதார்த்தத்தை ஆசிரியர் கதைக்கருவாகக் கொண்டிருக்கிறார்.

**வர்க்கம்**

உடைமை வர்க்கம், உழைக்கும் வர்க்கம் என்று இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. உடைமை வர்க்கம் (முதலாளியத்துவம்)தான் குறிப்பிட்ட சமுதாயத்தில், குறிப்பிட்ட காலகட்டத்தில் ஆளும் வர்க்கமாக இருக்கிறது. ஆளும் வர்க்கம் என்றால் அரசாங்கத்தின் ஆட்சி பீடத்தில் இருக்கிறவர்கள் என்று அர்த்தமல்ல. அந்த

சமுதாயத்தில் ஆதிக்கம் செலுத்துகிற, மற்றவர்களின் உழைப்பைப் பயன்படுத்துகிற வர்க்கம் என்று பொருள்.

உழைக்கும் வர்க்கம் அல்லது பாட்டாளி வர்க்கம் என்பது சமுதாயத்தில் நிலவுகிற, முற்றாகத் தனது உழைப்பை விற்பனை செய்வதன் மூலம் மட்டுமே வாழ்ந்து வருகிற, எந்த வகையான மூலதனத்திடம் இருந்தும் லாபம் பெற்றுக் கொள்ளாத ஒரு வர்க்கமாகும். இந்த வர்க்கத்தின் இன்பமும் துன்பமும், வாழ்வும் சாவும், இதன் இருப்பும்கூட உழைப்புக்கான தேவையின் மீதே சார்ந்திருக்கின்றன.

வர்க்கம் உள்ளிட்டவை மாறும் தன்மை கொண்ட அடையாளங்கள். மாறும் அடையாளங்களில் ஒருவரது நிலை எத்தகையதாக மாறினாலும் அவரது சமூக நிலை மாறா அடையாளமான சாதியை வைத்தே வழங்கப்படும்.

சாதியம் வகுத்தளித்த வர்க்கத்திலிருந்து ஒருவர் உயர்வதோ தாழ்வதோ அவரது சமூக நிலையைப் பெரிதும் பாதிப்பதில்லை. சாதி என்கிற கூட்டு அடையாளத்திற்குள்ள நிலையையே அவர் தனிநபராக பகிர்ந்து கொள்ள வேண்டியவராகிறார்.

பொதுவுடைமைக் கட்சி என்றால் அது அனைவருக்கும் பொதுவான கட்சி எனப் பலர் நினைப்பதில்லை. “பொதுவாகவே பொதுவுடைமைக் கட்சிக்குப் பள்ளர் கட்சி, பறையர் கட்சி என்ற பெயர்களே **1940**களில் இருந்தது. கிராமங்களில் அமாவாசைக் கூட்டங்கள் நிகழ்த்தி, அரசியல் பாடல்களைப் புகட்டி, வர்க்கப்

போராட்டங்களை நடத்தி, நிலவுடைமை உயர் சாதிக்காரர்களின் மோசமான தண்டனைகளிலிருந்து தலித்துகளை விடுவித்து தலித்துகளுக்கு சுயமரியாதையைப் பெற்றுத்தரப் போராடிய இயக்கமாக இருந்தது. ஆனால் 1950கள் முதற்கொண்டு பாராளுமன்ற வாதத்திலும் பொருளாதார வாதத்திலும் கம்யூனிச இயக்கம் மூழ்கித் திளைத்ததன் காரணமாகவும் சாதியை நிலவுடைமைச் சமூகத்தின் மேற்கட்டுமானக் கருத்தாக்கமாக மட்டுமே கண்டதன் காரணமாகவும், கிராமியத் தலித்துகளைக் கூலி விவசாயிகள் என்ற வர்க்கப் பரிமாணத்தில் மட்டுமே கண்டு அவர்களை சீர்திருத்த நோக்கில் திரட்டியது. இது தலித் கூலி விவசாயிகளுக்கு அதிகக் கூலியைப் பெற்றுத்தருவதற்கும் தலித்துகள் பெரும்பான்மையாக இருந்த கிராமங்களையுடைய சட்டமன்ற, பாராளுமன்ற இடங்களைக் கைப்பற்றுவதற்கும் பயன்பட்டது. இது தலித்துகளின் வர்க்கச் சிக்கலைப் புரட்சிகர நோக்கில் கண்டறிவதை மறுக்கும் போக்கில் அமைந்தது”[35] என்ற கோ.கேசவன் கூற்றும் ஒப்பு நோக்கத்தக்கது.

சந்திரபோஸ் தான் ஒரு வர்க்கப் போராளியாகவே வாழ்ந்துள்ளார். வர்க்கப் போராட்டம் தான் ஒடுக்கப்பட்டவர்களை ஒற்றிணைக்கும் என்பதை உறுதிபடக் கூறுகிறார். விளிம்புநிலை மக்களை மையத்தை நோக்கிக் கொண்டு செல்லும் இயக்கமாகவே பொதுவுடைமை இயக்கத்தின் போராட்டம் இருப்பதை அனுபவங்களின் வழியே உணர்த்துகிறார்.

தலித்துகள் ஒடுக்கப்பட்ட சாதியினர் என்ற விதத்தில் அவர்களுக்கான விடுதலையை புதிய சனநாயகச் சமூகம் முழுமையாகத் தந்துவிட இயலாது. அப்போதும் தீண்டாமை குறித்த கருத்துருவங்களும் நடைமுறைகளும் இருக்கக்கூடும். அப்போது சோசலிசத்தை நோக்கிய போராட்டங்களை முன் வைக்கும் சோசலிச அரசியலின் பகுதியாகவும் தலித் அரசியல் தொடர்ந்து நிலவக் கூடிய சாத்தியம் உண்டு என்ற நம்பிக்கை கொண்டவராக இருந்திருக்க வேண்டும். அவரின் படைப்புகளின் வழி நோக்குகின்ற போது அவர் ஒரு மானுடம் பாடிய வானம்பாடி என்பது அறிய முடிகிறது.

'கரைசேரும் ஓடங்கள்' என்ற குறும்புதினத்தில், குளத்தில் விழுந்த ஆட்டுக்குட்டியைக் காப்பாற்றச் சென்று மூழ்கியதற்காக அவனின் தந்தைக்கு ஐநூறு ரூபாய் அபராதம் விதிக்கப்படுகிறது. கோயில்களுக்கும் நுழைய முடியாமல் மேல் சாதிக்காரர்களால் அவமதிக்கப்பட்டவனைப் பொதுவுடைமைக் கட்சிதான் முழு மனிதனாக மாற்றுகிறது. உயர்ஜாதிக்காரங்களின் தெருவில்தான், ஒரு வாசக சாலை முளைத்தது. அதில் ஜாதி வித்தியாசம் பாராமல் எல்லோரையும் அனுமதிக்கிறார்களாம். பேப்பர், புத்தகம் எல்லாம் எவர் வேணுமானாலும் படிக்கலாமாம் என்று கேள்விப்பட்டேன். காது அறுபட்ட கதைகளும், குளத்தில் மூழ்கிய கதைகளெல்லாம் என் வாழ்க்கை அனுபவங்களாக இருந்தும் நான் அந்த வாசக சாலைக்குப் போனேன். என் உணர்ச்சிகளைக் கூர்மைப்படுத்தும் பட்டறையல்லவோ என்று பெருமிதம் கொண்டேன். டவுனில் இருந்து வாரம் ஒருமுறை நான்கு பேர்கள் அங்கு வருவார்கள்.

அவர்கள் புதிது புதிதாய் கற்றுக் கொடுத்தார்கள். அம்மா என்று முதன்முதலாய் என்னை உச்சரிக்க செய்த என் தாயைப் போல எனக்கு **காம்ரேட்** என்று உச்சரிக்க முதன்முதலில் கற்றுக் கொடுத்தவர்களும் அவர்களே. அதன் கூரை முகட்டில் செங்கொடி படபடத்ததை ஆனந்தத்தோடு பார்த்தேன். அந்த ஆனந்தக் களிப்பின் ஓர் சிறிய தொடர்ச்சிதான் இன்றைய நான் என்று கூறுவதிலிருந்து அவரின் பொதுவுடைமைச் சித்தாந்தம் தெரிய வருகிறது.

**புனைவின் வழியே விரிந்திடும் மனிதன்**

சாதி அடிப்படையில் பாரபட்சம் நிலவுகிறது. "மூலதன உடைமைகளைப் (Capital assets) (மூலதன உடைமைகள்: நிலம், உழவுக் கருவிகளான கலப்பை, டிராக்டர், மோட்டார் பம்ப்) பெற்றிருத்தல், வேலைவாய்ப்பு, கல்வி மற்றும் உடல்நலப் பாதுகாப்பு சேவைகளைப் பெறுதல் ஆகியவற்றைப் பொருத்தவரை அட்டவணை சாதியினரின் குடும்பங்களுக்கும் பிற சாதியினர் குடும்பங்களுக்குமிடையே உள்ள ஏற்றத் தாழ்வுகள் தொடர்கின்றன. மூலதன உடைமைகளைப் பெற்றிருப்பதைப் பொருத்தவரை அட்டவணை சாதியினர் சிறு முன்னேற்றம் கண்டுள்ள போதிலும் அவர்களிற் பெரும்பகுதியினர் இன்னும் தங்களது மரபான கூலி உழைப்பையே சார்ந்துள்ளனர். இந்த ஏற்றத் தாழ்வுக்கும் மரபான தொழில்களுக்குள்ளேயே அவர்கள் முடக்கி வைக்கப்பட்டிருப்பதற்கும் எந்தளவுக்கு சில குறிப்பிட்ட தொழில்களைச் செய்வதிலிருந்து அவர்களை விலக்கி வைத்த மரபு காரணம், எந்த அளவிற்கு இந்த ஏற்றத் தாழ்வை சந்தை வழியாகவும், சந்தை அல்லாத வழியாகவும் நடத்தப்படும் தொழில்களில்

தொடர்ந்து நிலவும் பாரபட்சங்கள் காரணம் அல்லது மேற்சொன்ன இரண்டு காரணங்களும் சேர்ந்து ஏற்றத்தாழ்வை உருவாக்குகின்றனவா என்பது ஒரு முக்கியமான கேள்வியாகும்."[36]

'குழலூதி வருவான் குமிந்தன்' என்ற சிறுகதையில், பெரும்பான்மையினர் சிறுபான்மையினரை அடக்கியொடுக்கிக் கொலையும் செய்து பெண்களைப் பாலியல் வன்முறைக்கு உட்படுத்துவதைக் கதைக்கருவாகக் கொண்டிருக்கிறார். முதலாளியத்துவ வர்க்கம் கீழ்வர்க்கத்தினரை நடத்தும் விதத்தினைப் பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

கிரில்லாக்களால் (அரச வம்சத்தைக் குறிக்கும் சொல்) மிகவும் இழிவாகக் கருதிடும் ஒரு தாழ்ந்த சாதியைச் சார்ந்தவன் கோசுவாமி வகுப்பைச் சார்ந்த உத்தம் முகுந்தா. உயர் வகுப்பினர் வாழும் பகுதியில் பக்திப் பனுவல்களைப் பாடி, பிச்சை எடுத்து பிழைப்பு நடத்துகிறான். அவர்கள் உண்டது போக மீதம் இருக்கும் ரொட்டித் துண்டுகளை அவனிடம் வீசி எறிவார்கள்.

சேரியின் இருபது வீடும் தாழ்ந்த சாதிக்காரர்களுடையது. வேறு வேறு ஒடுக்கப்பட்ட சாதிப் பிரிவுகளில் கோசுவாமி வம்சம் சற்று உயர்வாக மதிக்கப்படுகிறது.

உத்தம் முகுந்தாவின் மனைவி மாதோ, அவள் குடிப்பதற்குத் தண்ணீர் எடுப்பதற்குக் குளக்கரை செல்லும் போது, கிரில்லா சாதி இளைஞர்கள் வம்பிழுக்கிறார்கள். கிரில்லா இளைஞர்களைத் தட்டிக் கேட்க யாரும் முன்வருவதில்லை. "முன்பு ஒருநாள் சேரியில் ஒரு

கிழவனை வாய்வழி ரத்தம் சொட்டச் சொட்ட கிரில்லா இளைஞர்கள் அடித்தார்கள். கேட்பதற்கு யாரும் இல்லை. குமிந்தா உன் காவலிலா இது நடக்கிறது? செர்மிக் கிழவனை ஏன் இவர்கள் இப்படி அடிக்கிறார்கள்? அவன் என்ன தப்பு செய்தான்? அவன் வளர்த்த நாய் இவர்களின் பிள்ளைகளைப் பார்த்துக் குரைத்தால், இந்தக் கிழவன் என்ன செய்வான்? இப்படித்தான் அன்று ஒரு நாள் முணுமுணுத்தாள். அடி தாளாமல் அழும் கிழவனோடு சேர்த்து அழுதாள் மாதோ.

அதையடுத்து இன்னொரு நாள், அமிர்தாவின் பெண்ணைக் கற்பழித்துவிட்டார்கள். அதே கூட்டத்தினர்தான். பட்டப்பகலில் யாருக்கும் தடுக்கச் சக்தி இல்லை. ஆனால் அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து அழுதார்கள்"[37] என்று கூறும் போது சிறுபான்மையினரின் இயலாமைப் புலனாகிறது.

அவளை பாலியல் உறவுக்கு அழைக்கிறார்கள். "அவள் நடக்கும் திசையில் அவள் கால்களுக்கு முன்னே வெள்ளிக் காசுகளை வீசியெறிந்தார்கள். அவள் திரும்பிப் பார்க்கவில்லை... தண்ணீர்க் குடத்தைத் தலையில் வைத்துக் கொண்டு திரும்பினாள்.

ஏய்... நாய் ஜென்மமே... உனக்கு அவ்வளவு உயர்வு வந்துவிட்டதோடி, பத்தினி? உன் பிழைப்புத் தெரியாதா? உன் சதை நாங்கள் எறிந்த எச்சில் பிச்சையில் வளர்ந்தது தானே. இன்று எங்களுடன் வருவதனால் என்ன குறைந்து போகிறாய் நீ? உனக்கு நிறையப் பணம் தருகிறோம். வாடீ... என்று ஒருவன் குரலை உயர்த்தியும் தாழ்த்தியும் அவளை அழைத்தான்.

அவள் அழுதுகொண்டே வீடு வந்து சேர்கிறாள். வறுமையின் பிடியிலிருக்கும் உத்தம் முகந்தா, அவளின் அழுகைக்குக் காரணம் கேட்கிறான். அவர்களைத் தட்டிக் கேட்க ஆவேசத்துடன் புறப்படுகிறான். ஜாதிகெட்ட பிச்சைக்கார நாயா இப்படிப் பேசி விட்டான்? அந்தக் குரலையடுத்து அவன் நெஞ்சில் ஒரு பலமான அடி விழுந்தது. வெலவெலத்துக் கீழே விழுந்து விட்டான் உத்தம் முகுந்தா. அவன் கண்கள் நிலைகுத்தி விட்டன. அவன் முதுகிலும், மார்பிலும், மாறி மாறி அடி விழுகின்றது. பின்பு அவனை ஒரு மரத்தில் வைத்துக் கட்டினர்.

சீ... பெரிய அவமானம். என்ன பேசி விட்டான். இந்தப் பிசாசு. நம்மிடம் பிச்சையெடுத்துத் தின்று உடல் வளர்த்த இந்தச் சாக்கடைப் பிறவியா இப்படிப் பேசினான்?”[38] கடைசியில் அவனைக் கொலை செய்து விடுகின்றனர்.

உத்தம் முகுந்தாவின் மனைவி மாதோ, தன் குழந்தைகளை அழைத்துக் கொண்டு ஊர் ஊராக அலைகிறாள். கடைசியில் நாக்புரிக்கு வருகிறாள். அங்கே, மக்கள் பெருந்திரளாக நின்று வன்முறைக்கு எதிராக ஊர்வலம் நடத்துகின்றனர். “ஹரிஜனங்களைக் கொல்லாதே! உயிரைக் கொடுத்தேனும் ஹரிஜனங்களைப் பாதுகாப்போம். பிற்போக்கு சக்திகளை முறியடிப்போம். அவர்கள் நிலத்தை அவர்களிடமே கொடு. அவர்கள் இந்த மண்ணின் மைந்தர்கள். கோஷங்கள் வானைப் பிளந்தன. பல தரப்பட்ட மக்கள். மாவு முடிச்சுகளுடன், அழுக்குத் துணிகளுடன் விவசாயிகள், நகரத் தொழிலாளிகள், இளைஞர்கள், வில்லும், அம்பும், வேலும், பறையும் கொட்டும் மலை ஜாதியினர்.

அவள் இமை கொட்டாமல் பார்த்தாள். மற்றவர்களைப் போல்.

இது என்ன ஊர்வலமய்யா...?

ஹரிஜனப் பாதுகாப்பு தினம். நாங்கள் இந்தியாவெங்கிலும் இயக்கம் நடத்தி... நீதி கேட்கிறோம். முதியவர் கேட்டதற்குப் பதில் சொல்விட்டுப் போய்விட்டான் கொடியுடன் வந்த இளைஞன்.

எங்கும் கொடிகள், கொடிகள், செங்கொடியுடன் படபடக்கும் ஊர்வலம். இந்தப் பிரபஞ்சமே திரண்டு எங்கோ போய்க் கொண்டிருப்பதைப் போல். அவள் இன்னமும் இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்"(39) என்று வர்க்கப் போராட்டத்திற்கு ஆதரவாகச் செங்கொடி ஏந்தும் பொதுவுடைமைக் கட்சி என்பதை ஆசிரியர் கூறுகிறார்.

இந்துத்துவாவிற்கு எதிராக அம்பேத்கர் இரண்டு லட்சம் ஒடுக்கப்பட்ட மக்களைத் திரட்டி, புத்தமதத்திற்கு மாறிய இடம் நாக்புரி. அதனையே கதைக்களமாகக் கொண்டு கதை அமைத்திருப்பது யதார்த்தத்தை உள்ளடக்கியதாகும்.

இக்கதையினைப் பாராட்டிய பொன்னீலன் கூறுவது வருமாறு: "தாமரையை நான் வாசிக்கத் தொடங்கிய காலம் அது. ஆண்டு, நாள் நினைவில்லை. ஒரு தாமரையில் குழல் ஊதி வருவான் குமுந்தன் என்னும் ஒரு சிறுகதையைப் படித்துவிட்டு அடைந்த பரவசத்துக்கு எல்லை இல்லை. பல தடவை அந்தக் கதையைப் படித்தேன். மதுரைக்குப் போய் சந்திரபோஸைச் சந்தித்து அவர் கையைப் பிடித்துப் பலமாகக் குலுக்கினேன்"(40) என்று கூறுவதிலிருந்து இக்கதையின் வர்க்கப் போராட்டத்தின் ஆழம் தெரியவருகிறது.

சாதி அடையாளங்களுடன் முன்னிறுத்தப்படும் கதையில் கதாபாத்திரங்களின் வழியே கதையாடல் விரிந்தாலும் வன்முறையை நிகழ்த்துபவன், வன்முறைக்குப் பலியானவன் ஆகிய இரு முரண்களின் மூலம் மனித குலத்தின் கையறுநிலையும் அபத்தமும் பதிவாகியுள்ளன. சாதி வெறியினால் தூண்டப்பட்டு, எதிர் சாதியினரைக் கொன்று குவித்து, பிற சாதிப் பெண்களைப் பாலியல் வன்புணர்ச்சிக்குள்ளாக்கும் மனிதர்களின் செயல்பாடுகளைச் சந்திரபோஸ் விவரிக்கும் விதத்தில் வன்முறையாளர்கள் மீது கோபம் ஏற்படும் வேளையில், ஏன் இப்படி மனிதர்கள் ஏதோ ஒன்றின் பெயரால் தங்களுடைய இருப்பினை நாசப்படுத்துவதுடன் ஆன்மாவினையும் சிதைத்துக் கொள்கின்றனர் என்று தோன்றுகிறது.

ஒரு சமூகத்தினர் பதட்டமும் இன்னொரு சமூகத்தினர் உற்சாகமும் கொள்வது பாசிசத்தின் கோரமான வெளிப்பாடுகள். இத்தகைய நிலையினை சந்திரபோஸ் நுணுக்கமாகப் பதிவாக்கி உள்ளார்.

சாதி இழிவின் கோரமான விளைவுகள் என்று ஆவணமாகப் பதிவு செய்வது மட்டும் சந்திரபோஸின் நோக்கமாக இல்லை. அவர் படைத்திட்ட கதாபாத்திரங்கள் வளமையிலிருந்து மீறி, மிகைப்படுத்தப்பட்ட யதார்த்தத் தளத்தில் இயங்குவதனால் வெற்றுச் சோகமும் அனுதாபமும் ஏற்படுவது தவிர்க்கப் பட்டுள்ளன. கதையாடலில் வாசிப்பின் மூலம் தோன்றும் கூர்மையான கேள்விகள் சாதி இழிவின் விளைவான மனிதர்களின் விலங்குத்தனமான செயல்களையும் அப்பாவித்தனமான போக்குகளையும் முன்னிலைப்

படுத்துகின்றன. வன்முறை என்பது உடல் ரீதியில் மொழியின் வழியாகக் கட்டமைக்கப்பட்ட அதிகாரத்தின் வெளிப்பாடு என்பதனைச் சந்திரபோஸின் கதைகள் நுட்பமாக வெளிப்படுத்துகின்றன.

சிறுபான்மை, பெரும்பான்மை என்ற முரண் ஒவ்வொரு சூழலிலும் மாறிக் கொண்டேயிருக்கிறது. 'வல்லான் வகுத்த வாய்க்கால்' என்ற பொதுப்புத்தி நிலவிடும் சமூகத்தில், சிறுபான்மையினரை அடக்கி ஒடுக்கி நசுக்குவதில், பெரும்பான்மையினர் அடையும் மனக்கிளர்ச்சியும் பரவசமும் உளவியல் ரீதியில் ஆராயப்பட வேண்டியன. ஏதோ ஒன்றின் அடிப்படையில், மக்கள் திரளினை ஒருங்கிணைப்பதில் வல்லவன், அதிகாரத்தின் கனியை ருசிக்கத் தொடங்குகிறான். அவ்வதிகாரத்தின் விழுதுகளாகப் பெரும்பான்மையினர் சகல அக்கிரமங்களையும் செய்திடுமாறு தகவமைக்கப்படுவதுதான் கொடூரமான யதார்த்தம்.

**வர்க்கப் பேதம்**

வர்க்க ஏற்றத் தாழ்வுணர்வு, தீண்டாமை ஆகியவற்றின் பாதிப்பிலிருந்து விடுபட முடியாத நிலையையே வர்க்கப் புரட்சி அழுத்தமாகச் சுட்டுகிறது. வர்க்க ஏற்றத்தாழ்வு என்ற சமூக அவலத்தை எதிர்கொள்வது ஒரு தனிநிலை இயக்கச் செயற்பாடு அவசியமாகிறது. 'கரைசேரும் ஓடங்கள்' என்ற குறும்புதினத்தில், சாதிய இழிநிலை யதார்த்தத்தைக் காட்டியுள்ளார் ஆசிரியர். "பள்ளிக்கூடத்தில் எனக்கொரு ஆசிரியர் இருந்தார். அவர் என் ஜாதிக்காரர். எனக்கிருந்த எதிர்ப்புணர்வை அவர் அன்று

பாராட்டினார். எங்கள் ஹரிஜன ஹாஸ்டலுக்கு வருவார். எவனொருவன் உன்னைத் தீண்டத்தகாதவனாக எண்ணுகிறானோ - அவனைத் தீண்டத்தகதவனாக நடத்து என்பது அறிஞர் அம்பேத்கர் பொன்மொழி. அதை நினைவு வைத்துக் கொள்ளுங்கள். பணிந்து போவதென்ற பதத்தை நமது ஜாதிக் குறிப்பிலிருந்தே இனி எடுக்க வேண்டும். நம்மைத் தெருவில் செருப்பு அணிந்து போக வேண்டாம் என்று சொன்னாலும் சரி-அப்படிச் சொல்பவனை நாயை அடிப்பது போல நாம் ஒன்று திரண்டு அடித்து நொறுக்க வேண்டும். இப்படியெல்லாம் இரவில் எங்களை உட்கார வைத்து எங்களுக்குப் போதனை கூறுவார்"[41] என்கிறார் சந்திரபோஸ்.

விடுதியில் தங்கிப் படிக்கும் பையன்களுக்குச் சலவை செய்யவும் தலைமுடி வெட்டுவதற்கும் ஆட்கள் முன்வருவதில்லை. முடி வெட்டிக் கொள்வதற்கு ஆசை கொண்டதால் முடிவெட்டிக் கொள்வதற்குக் கடைக்கு செல்கிறான். தான் யார் என்று தெரிந்தால் கொலை விழும் என்பது தெரிந்தும், துணிச்சலுடன் முடி வெட்டிக் கொள்ளச் செல்கிறான். அப்போது கடைக்காரர் இவனைப் பற்றி விசாரிக்கிறார்.

நீ எந்த ஊரு; செந்நாப்பட்டி; என்ன சாதிக்காரன்டா; குடும்பமாரு என்று சொன்னவுடன் கடைக்காரரும் அங்கு இருந்தவர்களும் இவனை அடித்து நொறுக்கிவிடுகின்றனர். "தேவடியா நாயே! உனக்கு முடிவெட்டு ஒண்ணுதான் கேக்குதாக்கும்? அங்கே உட்கார்ந்திருந்த ஒருவன் பாய்ந்து வந்து என்னை அமுக்கிக் கொண்டான். இவன் என் காதை கத்தியால்

அறுத்தான். ஐயோ ஐயோ... என்னைக் கொல்றான், கொல்றான் என்று கத்தினேன். என் குரல் கேட்டு யாரும் வரவில்லை. என் சட்டையெல்லாம் ஒரே ரத்தம். அதோடு விட்டானா? கன்னத்திலும் முதுகிலும் கையை மடக்கி மடக்கி குத்தினான். தூக்கி வெளியே எறிந்தான். பத்து நிமிஷம் என்னால் எழுந்திருக்கவே முடியலை. எல்லோரும் என்னைச் சுற்றி நின்று வேடிக்கைப் பார்த்தார்கள். இப்படியா செய்தான்? இவனுக்கு வேணும் என்று கூப்பாடு போட்டார்கள். பிறகு தம்பிடித்து எழுந்திருந்தேன். திரும்பவும் பதினைந்து மைல் அழுது கொண்டே வந்தேன். அந்த கடை இன்றும் இருக்கிறது. ஆள் தான் மாற்றம்"[(42)] என்று கூறுவதிலிருந்து வர்க்க பேதம் அம்பலப்படுத்தப்பட்டுள்ளது.

**வர்க்கப் போராட்டம்**

'கரைசேரும் ஓடங்கள்' என்ற புதினத்தில், ஒரு வர்க்கப் போராட்டத்தை வென்றெடுக்கும் கதைக்களத்தைப் படைத்துள்ளார். அண்ணாவித் தோட்டப் பகுதிக்காரர்கள்; குப்பத்துக்காரர்களின் வீடுகளைக் காலி செய்து விட்டு அங்கே திரையரங்கம் கட்டுவதற்காக ஏற்பாடு நடக்கிறது. அதில் குப்பத்துக்காரர்கள் வன்முறைக்கு ஆளாகிறார்கள். இதைத் தட்டிக் கேட்க பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள் தயாராகிறார்கள். "ரத்தவெறி கொண்டவர்களுக்குப் பலியாய், ஒடுக்கப்பட்டவர்களின் உரிமைக்காய், இந்த மண்ணில் குரல் கொடுத்த உழைப்பாளிச் சிங்கங்களின் படங்கள். அவர்களைக் காவு கொண்ட ரத்தக்கறை படிந்த பூமியின் நிழற்படங்கள். அவன் சிந்தையில் ஒரு சக்தியாய், ஒரு அசைக்க முடியாத நம்பிக்கையாய்,

என்றென்றும் சுடர்விட்டு எரிவதாய் அவனுக்குத் தெரிந்தது. ஒரு செயலுக்கு முன்பு தனது குலதெய்வங்களை வழிபடும் ஒருவித நம்பிக்கையைப் போல - மாணிக்கம் அந்தத் தியாகிகளைத் தனது குலதெய்வங்களாய் வழிபட்டான்"[43] என்று கதைசொல்லி கூறுவதாக அமைத்திருந்தாலும், தன்னையே முன்னிறுத்தும் பொதுவுடைச் சிந்தனையாளராகவே சந்திரபோஸ் காணப்படுகிறார்.

அடிபட்ட மனிதர்களுக்காக எந்தவித பிரதிபலனையும் எதிர்பார்க்காதக் கட்சி பொதுவுடைக்கட்சி என்பதை, "கொடிகள் வைத்துக் கோஷங்களிடும் இந்த மனிதர்களுக்கு நாம் என்ன உதவி செய்தோம்? இவர்களைப் பற்றி என்றேனும் சிந்தித்ததுண்டோ? அல்லது இவர்களுக்கு தேர்தலில் ஓட்டாவது போட்டதுண்டா? எந்தக் கைமாறும் கருதாமல் நமக்கு உதவி செய்ய வந்திருக்கிறார்களே...

யாரும் எதற்கும் பயப்பட வேண்டாம். உங்களுக்காக நாங்கள் போராட வந்திருக்கிறோம். உங்கள் சார்பில் நியாயம் கேட்க வந்திருக்கிறோம். உங்கள் மீது கை வைத்து-உங்கள் ரத்தத்தை இந்த மண்ணில் சிந்த வைத்த அந்தக் கும்பலை நாங்கள் சும்மா விடமாட்டோம். உங்களை இந்தக் குப்பத்திலிருந்து வெளியேற்ற அவர்களுக்கு எந்தவித நியாயமும் கிடையாது. கலெக்டரிடம் முறையிடுவோம். சர்க்காரில் முறையிடுவோம். கோர்டில் முறையிடுவோம். அல்லது எந்த அரங்கத்தில் வைத்து வேண்டுமானாலும் அவர்களைச் சந்திப்போம். நீங்கள் எல்லோரும் ஒற்றுமையாய் இருக்க வேண்டும்"[44] என்கிறார் சந்திரபோஸ்.

‘உழைப்பின் பிரதிபலன் நஷ்டம்’ என்ற கதையில், தான் சார்ந்த மண்ணின் மனிதர்களின் நினைவலைகளின் எண்ண ஓட்டத்தை நன்கு பிரதிபலித்துள்ளார். பண்ணையார் ஆதிக்கத்தில் அடங்கிப் போய் தம் அடிமைப் போக்கை மாற்றிக் கொள்ளாதவரான மாரிமுத்து. பரம்பரைப் பரம்பரையாகக் கொத்தடிமையாய் இருக்க நினைக்கும் அப்பாவி. மாரிமுத்துவின் மனைவி வேலம்மா. தன் கணவனின் அடிமைத்தனத்தை; பண்ணையாருக்காகக் கணவன் அடங்கிப் போய்க் கிடப்பதை இருவருக்கும் இடையே நடக்கும் பேச்சில் அவள் வெளிப்படுத்தினாலும், அதைக் கண்டு கொள்ளாமல் பண்ணையாரை எதிர்த்து எதுவும் பேசக் கூடாது என்ற எண்ணம் கொண்டவனாக இருக்கிறான். மனைவியிடம் இருக்கும் துணிவுகூட அவனிடம் காணமுடியவில்லை. ஆனால், பண்ணையாரைக் காண வாழைத்தாருடன் சென்றவனுக்கு அதிர்ச்சி காத்திருக்கிறது. (அண்ணாவின் ‘செவ்வாழை’ என்னும் சிறுகதை ஒப்பு நோக்கத்தக்கது.)

மாரிமுத்துவுக்கு வயதாகிவிட்ட காரணத்தினால் அவனை விலக்கிவிட்டு வேறு ஒரு வேலையாளை நியமிக்கச் சொல்லும் பண்ணையாரின் மனைவி சொல்லைப் பண்ணையாரால் மறுக்க முடியவில்லை. இதைக் கேட்ட மாரிமுத்து வாழைத்தாரைப் பண்ணையார் வீட்டு வாசற்படியில் வைத்துவிட்டு அங்கிருந்து வெளியேறுகிறான். மாரிமுத்து யதார்த்த உணர்வில் படைக்கப்பட்ட பாத்திரம். பண்ணையாரைப் பற்றிச் சிறு வார்த்தைக் குறை கூறினாலும், பொறுத்துக் கொள்ள முடியாத கணவனின் அடிமைப் புத்தியை எடுத்துச் சொல்லும் அவன் மனைவி வேலம்மா ஒரு

வித்தியாசமான படைப்பாகும். ஏழைகளின் உழைப்பு ஒருவகையில் முதலாளிகளின் சுரண்டல் வர்க்கப் பேதத்தைக் காட்டுவதாகப் படைக்கப்பட்டுள்ளது.

ஆற்றின் நீரோட்டம் போல் கதை நகர்ந்து செல்வது வாசகனுக்குப் போதுமான செய்தியாகும். ஆனால் ஆற்றின் அடிமணல் குறித்து அறிவதற்கு அவசியமில்லாத நிலையில், சந்திரபோஸின் விளக்கம் யதார்த்தத்தை உலகிற்கு உச்சந்தலையில் ஆணி அடித்தாற் போன்று சொல்ல வேண்டும் என்கிற உந்துதல் ஏற்பட்டிருக்க வேண்டும். வார்த்தைக்கும் வாழ்க்கைக்கும் வேறுபாடு இல்லாமல் வாழும் தன்மை கொண்டவராகவே கருதப்பெறுகிறார்.

இவரின் புனைகதைகள் கற்பனைக் கதைகளாக இருக்க வாய்ப்பில்லை. அவரைக் கடந்து சென்ற மனிதனின் கதையாகவும் இருக்கலாம். அவருக்கு ஏற்பட்ட ரணங்களின் கதைகளாகவும் இருக்கலாம். ஏனெனில் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தின் அடிப்படையில்; தான் சார்ந்த இயக்கத்தின் வழி ஏற்பட்ட அனுபவத்தின் அடிப்படையில் தான் கதைகளை அவர் படைத்திருக்க வேண்டும். அவைகள் புனைவுகள் அல்ல; அத்தனையும் யதார்த்தம் என்று ஆய்வாளர் கருதுகிறார். “இந்திய நாட்டில் முற்போக்கு இலக்கியவாதிகளின் அமைப்பு உள்ளது. இதில் பல கட்சிகளைச் சேர்ந்தவர்கள் உள்ளனர். பல தத்துவங்களின் சார்பாளர்கள் உள்ளனர். ஆனால் அவர்கள் சமூகத்தையும், சமூகத்தில் மனித உறவுகளையும் ஆய்ந்து, சமூக நியதிகளின்படியே சமூகத்தைச் சோசலிஸ்டு உலகமாக

மாற்ற வேண்டும் என்ற குறிக்கோள் கொண்டவர்கள்”[45] என்ற நா.வானமாமலையின் கூற்று இங்கு நோக்கத்தக்கது.

‘பட்ட மரம் பிரிந்த பறவைகள்’ என்ற கதையில், ஒரு காலத்தில் பெரும் வசதியாக இருந்துவிட்டு மேலாதிக்கச் சுரண்டலால் வறிதாகி ஒன்றுமில்லாமல் தவிக்கும் கிழவர் (ஜென்ம பூமி), கஞ்சிக்கு வழியற்று ஆடுமேய்க்கும் சிறுவனுக்குக் கிடைக்கும் கஞ்சியை அவனிடம் கேட்டு அது அவனுக்கும் கிடைக்காமல், தனக்கும் கிடைக்காமல் போன சூழலில் தன் கதையை அவனிடம் சொல்லும் தவசிக் கிழவன்.

‘ஒரு பூனைக்கு மணி கட்டப்படுகிறது’ என்ற கதையில், ஊர்த்தலைவர் விஜயராகவன் ஊருக்கு எதுவுமே செய்யாமல் இருக்கும் நிலையில், அதிகார வர்க்கத்தைத் தட்டிக் கேட்கும் அவ்வூர் இளைஞர்கள். “இந்த ஊரப் பத்து வருஷமாக் கெடுத்துறுக்கீங்க. ஒனக்கு என்ன தெரியும்னு கேக்காதீங்க. எனக்கு எல்லாம் தெரியும். ரிக்கார்டு கேப்பீங்க அது வார நேரத்தில் வரும்.

ஒண்ணு மட்டும் செஞ்சுக்கிட்டீங்க. இந்த பத்து வருஷத்துல இந்த ஊரையே தூக்கிச் சாப்புடுறாப்போல வீட்டக் கட்டீட்டீங்க... காடு வாங்கீட்டீங்க. வேலிக்குளம் ஆயக்கெட்ல 20 ஏக்கர் நஞ்சை வாங்கியாச்சு.

... பஞ்சாயத்துப் போர்டை நாசம் பண்ணீட்டீங்களையா... தீர்மானங்களை ஒங்க வீட்ல வச்சு எழுதிக்கிர்றது, அவன் அவன் மெம்பருங்க வீட்ல போயி கையெழுத்து மட்டும் வாங்கிர்றது.

அவனுக்கு எதுல கையெழுத்துப் போடுறோம்முன்னுகூடத் தெரியாது. சுருட்டுறதுக்குத் தோதா மெம்பருங்களா வச்சுக்கிட்டீங்க.

...நாலு வருஷத்துக்கு முன்னால இந்தச் சுடுகாட்டுப் பொட்டல்ல மரம் நட்டணும்னு குழி வெட்டுனீங்களா? ஆளுங்களப் பொதைக்கிர்றதுக்காகக் குழி வெட்டுனீங்களா? ஐயாயிரம் குழி வெட்டிருக்கீங்க. ஒரு குழிக்கு 5 ரூபா கணக்கு எழுதிருக்கீங்க. 50 பைசாதான் கொடுத்திருக்கீங்க... அந்தக் குழியெல்லாம் அப்டியே கெடக்கு... அது எவன் வீட்டுச் சொத்து?

... ஊருக்குக் குடி தண்ணீருக்குன்னு ஒரு டாங்க் கட்டினீங்கள்ள... ஒரு நாளாவது அதுல தண்ணி வந்ததா? ஏன் வரலேன்னு யாரு கிட்டயாவது கேட்டீங்களா? மோட்டாரு ரிப்பேர்னு டாங்க் கதவு இந்த ரெண்டு வருஷமா மூடித்தான் கெடக்கு. இப்ப அந்த மோட்டாரு எங்கே இருக்கின்னு எனக்குத் தெரியும். பகிரங்கப்படுத்த நான் விரும்பல.

இன்னியும் நீங்க கூட்டுறவு சொசைட்டிகளுக்கு வேற பிரசிடெண்ட். அந்தக் கதையெல்லாம் அவுத்துடணுமுன்னா வுட்டுறேன். எனக்கு என்ன தெரியுமுன்னு கேட்டீங்கள்ள... ஒங்க சரித்திரமே தெரியும். அதை மட்டும் நெனைச்சுங்கோங்க...

ஏய்..பொடி நாயே... என் அந்தஸ்து என்ன? என்னய நீ யார்னு கேள்வி கேக்கிறது. உன்னைக் கொண்ணு போட்டுறேன் பாரு என்று எழுந்தார் பிரசிடெண்ட். அவனும் எழுந்து விட்டான்.

ஏய் தொடாதே... வெட்டு விழும்... ஏய்புடி.... எனத்தையா இல்லாததச் சொல்லிவிட்டான் அவன்? ஒரே அமளி, கூச்சல் குழப்பம். எழுந்திருநத பிரசிடெண்ட் மலைத்துப் போய் நின்றார் "[46] என்று கதையை நிறைவு செய்கிறார். உழைக்கும் வர்க்கம் உண்மை கண்டு வெகுண்டு எழுந்துவிட்டால் அதிகாரவர்க்கத்தின் ஆணிவேர் பிடுங்கப்படும் என்பதைப் பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

**தொகுப்புரை**

சாதியத்தின் ஒரு தனித்துவமான பண்பு ஒவ்வொருவரையும் ஒரு சாதியானாக உணர வைப்பதுதான். சாதியாக உணர்வதென்பது ஒரு சாதிக்குக் கீழாக உணர்வது மட்டுமல்ல, இன்னொரு சாதிக்கு மேலாக உணருவதும்தான்.

சாதிய, வர்க்கப் போராட்டக் கருத்துக்கள் காலங்காலமாக இருந்து வருகின்றன. மிகவும் நவீனமான விசயத்திலும், சாதியத்தின் வேர் ஆழமாக வேரூன்றியிருப்பது, நாலாயிரம் ஆண்டுகள் கெட்டித்தட்டிப் போயிருக்கும் மனநிலையின் வெளிப்பாடு என்பதனைப் சந்திரபோஸின் புனைகதைகள் விவரிக்கின்றன.

சாதியின் பெயராலும், மதத்தின் பெயராலும், மொழியின் பெயராலும், இனத்தின் பெயராலும், நாட்டின் பெயராலும், உலகெங்கிலும் மூண்டு வரும் கலவரங்கள் செயற்கையாகத் தூண்டிவிடப்பட்டவை. ஆண், பெண், குழந்தைகள் மட்டுமல்லாமல் அன்பு, பரிவு, அறம், நியாயம் போன்ற மனிதப் பண்புகளையும் பொசுக்கித் தீர்த்து விடுகின்றது. அமைதியான உலகைப் படைக்கச் சமத்துவம் (சோசலிசம்) என்ற உணர்வு தேவைப்படுகிறது.

சந்திரபோஸ் தனது புனைகதைகளில் மக்களிடையே வர்க்க பேதமின்மையும், சகிப்புத்தன்மையும், மனிதநேயமும் இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தியுள்ளார் என்பது பெறப்படுகிறது.

சந்திரபோஸ் புனைகதைகள் எனில், கரிசல்காட்டு இலக்கியமாக, அதுவும் பள்ளர்களின் வாழ்க்கையைச் சுற்றிச் சுழலும் இயல்புடையனவாக இருக்கின்றன. இவரின் கதைகளில் பார்ப்பனர்கள் வருகிறார்கள். ஆனால், பார்ப்பினியம் அதிகம் பேசப்படவில்லை. மேட்டுக்குடியினராகக் காணப்படும் பிற சாதி (நாயக்கர்) இனத்தவரே புனைகதைகளில் அதிகம் காணப்படுகின்றனர். அவர்களின் அடக்குமுறைகளை எந்தவித சமரசமும் இன்றி துணிச்சலுடன் கையாண்டிருக்கிறார்.

மார்க்சியம் சொல்லாத ஒன்றைத் தலித்தியம் சொல்லப் போவதில்லை என்ற கருத்துடையவராகவும் காணப்படுகிறார். இவரின் புனைகதைகளில் சாதியம் அதிகம் பேசப்பட்டாலும், அதில் ஒரு நியாயம் இருப்பதாகவே காணப்படுகிறது. சாதிச் சண்டைகளால் பழிக்குப்பழி வாங்கும் எண்ணத்திலிருந்து அனைத்துச் சாதியினரும் அமைதியை விரும்புபவர்களாகக் கதை மாந்தர்கள் படைக்கப்பட்டிருப்பது சந்திரபோஸின் சோசலிச யதார்த்தத்தைக் காட்டுகிறது.

படைப்பாளி தான் பிறந்து வளர்ந்த நிலத்தின் மீது அக்கறை கொள்ளும் போது, அவை சமூக வரலாற்றின் பண்பாட்டுப் பதிவுகளாக விளங்குகின்றன. சந்திரபோஸின் புனைகதைக்குள்

பொதிந்துள்ள நுட்பங்கள், நிலமும் வெளியும் சார்ந்தவை எனப் பொதுவாக அடையாளப்படுத்தலாம்.

சந்திரபோஸின் எந்தவொரு படைப்பிலும் மனிதகுலத்துக்கு விரோதமான அம்சங்களைச் சிறிய அளவிலும் காணமுடியவில்லை. எத்தகைய நெருக்கடியிலும், சிக்கலிலும் மாட்டிக் கொள்ள நேர்ந்தாலும்; கசப்பும், துயரமும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் பொங்கி வழிந்தாலும் அவருடைய படைப்புகள் மனிதகுல மேன்மை குறித்து மட்டுமே அக்கறை கொள்கின்றன.

அதிகாரம், வன்முறை கட்டமைக்கும் எல்லாவிதமான இக்கட்டுகளையும் தகர்த்து, மனித வாழ்வின் உயர்வு குறித்து அக்கறை கொள்ளுதல் என்பது சந்திரபோஸிற்கு இயல்பாகவே அமைந்துள்ளது. இன்னும் சொல்லப்போனால், ஒருவகையில் அறச்சீற்றமும், சிறுமை கண்டு பொங்கும் மனநிலையும் அவரின் புனைகதைகள் வழியே வெளிப்படுவதை அவதானிக்க முடிகிறது.

வர்க்கப் போராட்டத்திற்கு ஆதரவாகச் செயல்படும், செங்கொடி ஏந்தும் பொதுவுடைமைக் கட்சியின் செயல்பாட்டினை விவரிக்கிறார் ஆசிரியர்.

ஒடுக்கப்பட்டவர்களும் மனிதர்கள்தான் என்பதை குத்திபகடை என்ற புனைகதையின் வழி காட்டுகிறார். மற்றவர்களுக்காகப் பாடை கட்டும் குத்திபகடையின் உடல், பிற சாதியினரால் பாடை கட்டப்பட்டுத் தூக்கிச் செல்வது சோசலிச யதார்த்தமாகவே காணப்படுகிறது.

சாதி அடையாளங்களுடன் முன்னிறுத்தப்படும் புனைகதைகளில், பாத்திரங்களின் வழியே கதையாடல் விரிந்தாலும் வன்முறையை நிகழ்த்துபவன், வன்முறைக்குப் பலியானவன் ஆகிய இரு முரண்களின் மூலம் மனித குலத்தின் கையறுநிலையும் அபத்தமும் பதிவாகியுள்ளன.

சாதி இழிவின் கோரமான விளைவுகள் என்று ஆவணமாகப் பதிவு செய்வது மட்டும் சந்திரபோஸின் நோக்கமாக இல்லை. அவர் படைத்திட்டக் கதாபாத்திரங்கள் வளமையிலிருந்து மீறி, மிகைப்படுத்தப்பட்ட யதார்த்தத் தளத்தில் இயங்குவதனால் வெற்றுச் சோகமும் அனுதாபமும் ஏற்படுவது தவிர்க்கப் பட்டுள்ளன. கதையாடலில் வாசிப்பின் மூலம் தோன்றும் கூர்மையான கேள்விகள் சாதி இழிவின் விளைவான மனிதர்களின் விலங்குத்தனமான செயல்களையும், அப்பாவித்தனமான போக்குகளையும் முன்னிலைப் படுத்துகின்றன.

இரத்த உறவுக்குள் பிறசாதி இரத்த உறவுகள் கலப்பதற்கு சாதியம் இடமளிக்கவில்லை. மேல் வர்க்கத்தினரின் சுரண்டல்களுக்கு கீழ் வர்க்கத்தினர் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். வர்க்கப் போராட்டங்களே மேடுகளை வெட்டி பள்ளங்களைச் சீர்படுத்தி, சமதளத்தை உருவாக்க முடியும் என்ற கருத்தினை சந்திரபோஸின் புனைகதைகள் கொண்டுள்ளன என்பது ஆய்வில் பெறப்படுகின்றது.

**சான்றெண் விளக்கம்**

*1.* நா.வானமாமலை, தமிழ்நாட்டில் சாதி சமத்துவப் போராட்டக் கருத்துக்கள், ப.*5*.

*2.* புறம்.*335:7-8*.

*3.* குறள்: *972*.

*4.* சந்திரபோஸ், நந்தியாற்றங்கரையும் கரைசேரும் ஓடங்கள் (*2*குறுநாவல்கள்), ப.*34*.

*5.* மேலது, பக்.*36-37*.

*6.* சந்திரபோஸ், நெஞ்சிலாடும் மலர்கள், ப.*184*.

*7.* மேலது, ப.*185*.

*8.* மேலது, ப.*186*.

*9.* சந்திரபோஸ், நெஞ்சிலாடும் மலர்கள், ப.*86*.

*10.* மேலது, ப.*185*.

*11.* பொ.வேல்சாமி, அ.மார்க்ஸ், தமிழ் இலக்கியப் பராம்பரியத்தில் சாதி எதிர்ப்புக் குரல், பக்.*6-7*.

*12.* நா.வானமாமலை, தமிழ்நாட்டில் சாதி சமத்துவப் போராட்டக் கருத்துகள், ப.*10*.

*13.* சந்திரபோஸ், நெஞ்சிலாடும் மலர்கள், ப.*204*.

*14.* மேலது, ப.*205*.

*15.* மேலது, ப.*205*.

*16.* மேலது, ப.*206*.

*17.* மேலது, ப.*208*.

*18.* சந்திரபோஸ், நெஞ்சிலாடும் மலர்கள், பக்.*209-210*.

*19.* மேலது, ப.*210*.

20. மேலது, ப.219.

21. மேலது, ப.219.

22. மேலது, பக்.255-256.

23. மேலது, ப.256.

24. மேலது, ப.257.

25. அ.மார்க்ஸ் இன்றைய சமூகப் பொருளாதாரச் சூழலில் தலித் விடுதலை), (ரவிக்குமார் (தொ), தலித் கலை இலக்கியம் அரசியல், பக்.172-173.

26. சந்திரபோஸ், நெஞ்சிலாடும் மலர்கள், ப.259.

27. மேலது, ப.261.

28. ஆனந்த் டெல்டும்டெ,(தமிழில்:எஸ்.வி.ராஜதுரை), ஏகாதிபத்திய - எதிர்ப்பும் சாதி ஒழிப்பும், ப.198.

29. சந்திரபோஸ், நெஞ்சிலாடும் மலர்கள், பக்.262-263.

30. (ரவிக்குமார் (தொ),(அ.மார்க்ஸ் இன்றைய சமூகப் பொருளாதாரச் சூழலில் தலித் விடுதலை), தலித் கலை இலக்கியம் அரசியல், ப.173.

31. சந்திரபோஸ், இன்னொரு சாட்சி, சிறுகதைகள் (குத்தி பகடை), ப.65.

32. சந்திரபோஸ், நெஞ்சிலாடும் மலர்கள், ப.67.

33. மேலது, ப.68.

34. சந்திரபோஸ், ஒரு அன்னையின் காணிக்கை (அந்த விடியலின் போது), (சிறுகதைகள்), பக்.20-21.

35. கோ.கேசவன், மார்க்சிய லெனினிய இயக்கமும் தலித் அரசியலும்), (ரவிக்குமார் (தொ), தலித் கலை இலக்கியம் அரசியல், ப.131.

36. (Thorat, Sukhadeo (2005), “Current Status of Dalit”, Occasional Papers, IIDS, New Delhi), (ஆனந்த் டெல்டும்ப்டெ (தமிழில்: எஸ்.வி.ராஜதுரை), ஏகாதிபத்திய எதிர்ப்பும் சாதி ஒழிப்பும், ப.29.)

*37. சந்திரபோஸ், ஜேம்ஸ் வாத்தியார் (குழலூதி வருவான் குமிந்தன்), ப.23.*

*38. மேலது, பக்.26-27.*

*39. மேலது, பக்.29-30.*

*40.பொன்னீலன், ஆ.சந்திரபோஸ், அவர்கள் நினைவு அறக்கட்டளை நினைவு மலர், ப.23.*

*41. சந்திரபோஸ், கரைசேரும் ஓடங்கள், ப. 122.*

*42. சந்திரபோஸ், நந்தியாற்றங்கரையும் கரைசேரும் ஓடங்களும் (குறுநாவல்கள்), பக்.123-124.*

*43. சந்திரபோஸ், நந்தியாற்றங்கரையும் கரை சேரும் ஓடங்களும் (குறுநாவல்கள்), ப.114.*

*44. மேலது, பக்.116-117.*

*45. நா. வானமாமலை, மார்க்சிய ஆய்வுகள், பக். 61-62.*

*46. சந்திரபோஸ், ஜேம்ஸ் வாத்தியார் (ஒரு பூனைக்கு மணி கட்டப்படுகிறது) ப.23.*

# முடிவுரை

*மானுடம் பாடிய வானம்பாடி என்ற அடைமொழியுடன் அறியப்படும் ஆ.சந்திரபோஸ், விருதுநகர் மாவட்டம், மேலக்கோனம்பட்டி என்னும் சிற்றூரில் எளிய விவசாயக் குடும்பத்தில் **07.05.1946**ஆம் ஆண்டு பிறந்தவர். அவருடைய பெற்றோர் ஆண்டியப்பன்-இராக்கம்மாள் தம்பதியாவர். அவருக்கு ஒரு சகோதரர், ஒரு சகோதரி உள்ளனர்.*

*கல்லூரியில்* **(PUC)** *புதுமுக வகுப்புவரை பயின்றுள்ளார். திருமணம் செய்து கொள்ளவில்லை.*

*தமிழகக் காவல்துறையில் அமைச்சுப் பணியாளராக **1969**இல் பணியில் சேர்ந்து, முப்பத்தி மூன்று ஆண்டுகள் பணியாற்றி **2004**ஆம் ஆண்டு ஓய்வு பெற்றார். இவர் **12.03.2012** அன்று உடல்நலக்குறைவால் இயற்கை எய்தினார்.*

*ஜெயகாந்தன், பொன்னீலன், ஈரோடு தமிழன்பன், து. இராசா, அசோக் சீனிவாசன், சந்திரகாந்தன், இரா. நல்லகண்ணு, தி.வேணுகோபால், தீபம் கா. பார்த்தசாரதி, அறந்தை நாராயணன், தி.சு. நடராசன், பரிணாமன் போன்றவர்களுடன் நெருக்கமான தொடர்பு கொண்டவர்.*

*தாமரை, கணையாழி, எழுத்து, ஆனந்தவிகடன் போன்ற இதழ்களில் சிறுகதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள், புதினங்கள், கவிதைகள் என எழுதி வந்துள்ளார்.*

புதினங்கள், குறும்புதினங்கள், சிறுகதைகள் படைத்துள்ளார். கவிதை நூல் ஒன்றும், திரைப்பட விமர்சனக் கட்டுரை நூலும் படைத்துள்ளார். அவரின் முதல் சிறுகதை - உழைப்பின் பிரதிபலன் நட்டம், புதினம் - கரைசேரும் ஓடங்கள் ஆகும்.

சோசலிச யதார்த்த இலக்கியம் செய்து, இடதுசாரி இயக்கத்தை வலுப்படுத்துபவராகவும், முன்னெடுத்துச் செல்பவராகவும் விளங்கியவர்.

தான் சார்ந்த இனம் குறித்து எழுதினாலும், அதிலும் ஒரு சமத்துவச் சிந்தனையைக் காணமுடிகிறது. பொதுவுடைமைச் சிந்தனையாளரான சந்திரபோஸ், சோசலிச எண்ணத்துடனே தனது கதைக்களத்தை அமைத்துள்ளார். அதனால் பல நேரங்களில் எதிர்ப்புணர்வையும் தாங்கியவராகவும் காணப்படுகிறார். சூறாவளிக் காற்றினூடாக விளக்கின் ஒளி, சுடர்விட்டு ஒளிரும் என்ற நம்பிக்கைதான் மனித இருப்பினை அர்த்தப்படுத்துகிறது. எளிய மனிதன் மீதான சந்திரபோஸின் கரிசனை அவரின் கதைகளில் உறைந்திருக்கிறது.

படைப்பாளியின் கருத்துக்களையும் மீறி வெளிப்பட்டு நிற்பதுதான் யதார்த்தவாதம் ஆகும். சந்திரபோஸின் கதைகள் சோசலிச யதார்த்தவாதக் கொள்கைகளுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. அவை வாழ்வின் உண்மைகளைச் சொல்லின; அவற்றின் நிறைகுறைகளை விமர்சன பூர்வமாகச் சொல்லின. புதிய சமுதாயம் படைக்க நடக்கும் ஒரு போராட்டத்தையும் சொல்லின.

நம்பிக்கையோடு எதிர்காலத்தை நோக்கும் ஒரு தலைமுறை பற்றிச் சொல்கின்றன. யதார்த்தவாதம், விமர்சனபூர்வ யதார்த்தவாதம் இரண்டையும் உள்ளடக்கி மனிதனின் படைப்பாற்றலைக் கோடிட்டுக் காட்டுகிற சோசலிச யதார்த்தவாதமாகவும் அவை இருக்கின்றன.

வருங்காலம் சோசலிசத்திற்கே சொந்தம் என வெளிப்படையகப் படைப்பாளி அறிவிக்க வேண்டியதில்லை. தனது கதையின் நாயகன் கடைசியில் சோசலிச முழக்கம் கொடுத்துக் கொண்டு கம்யூனிஸ்டு ஊர்வலத்தில் போவதாகக் கதையை முடிக்க வேண்டிய கட்டாயமில்லை. கதையின் சூழலிலிருந்து பாத்திரங்களின் செயல்பாடுகளிலிருந்தும் வெளிப்பட வேண்டும் என்று கருதுகிற ஏங்கல்ஸின் கோட்பாட்டின்படி சந்திரபோஸ் (குழலூதி வருவான் குமுந்தன்) புதினத்தைப் படைத்துள்ளார் என்பது பெறப்படுகிறது.

புரட்சிகர கொள்கையினைக் கொண்டவராகச் சந்திரபோஸ் விளங்கினாலும், முரட்டுப் பலா; உள்ளே இனிப்புச் சுளைகள் என்பதைப் போல விளங்குகிறார்.

சாதியத்தின் வேர் ஆழமாகப் பரவி எங்கும் வியாபித்திருக்கிறது என்பதைப் புரிந்து கொண்ட சந்திரபோஸ், தன்னால் இயன்ற அதன் கிளைகளை வெட்டுகின்ற வேலையினைத் தம் புனைகதைகளின் வழி செய்துள்ளார்.

அமைதியான உலகைப் படைக்கச் சமத்துவம் (சோசலிசம்) என்ற உணர்வு தேவைப்படுகிறது. ஆதிக்க சக்திகளால் மூட்டிவிடப்பட்ட நெருப்பு. ஆண், பெண், குழந்தைகள்

மட்டுமல்லாமல் அன்பு, பரிவு, அறம், நியாயம் போன்ற மனிதப் பண்புகளையும் பொசுக்கித் தீர்த்து விடுகின்றது என்பது கதைகளின் வழி அறிய முடிகிறது.

சந்திரபோஸ் தனது புனைகதைகளில் மக்களிடையே மத ஒற்றுமையும், சகிப்புத்தன்மையும், மனிதநேயமும் இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தியுள்ளார்.

இவரின் கதைகளில் பார்ப்பினியம் அதிகம் பேசப்படவில்லை. மேட்டுக்குடியினராகக் காணப்படும் பிற (நாயக்கர்) இனத்தவரே புனைகதைகளில் அதிகம் காணப்படுகின்றனர். அவர்களின் அடக்குமுறைகளை எந்தவிதச் சமரசமும் இன்றித் துணிச்சலுடன் கையாண்டிருப்பது கவனத்திற்குரியதாகும்.

சந்திரபோஸ் சோசலிசவாதி என்பதில் மாற்றுக்கருத்தில்லை. மார்க்சியத்திற்கு எதிரானது தலித்தியம் என்பவர்களுக்கு மத்தியில் தலித்தியத்தையும் மார்க்சியத்தையும் ஒரே நேர்கோட்டில் கொண்டு செல்வது அவரின் தனிச்சிறப்பு என்பது அறியலாகிறது.

இவரின் புனைகதைகளில் சாதியம் அதிகம் பேசப்பட்டாலும், அதில் ஒரு நியாயம் இருப்பதாகவே காணப்படுகிறது. சாதிச் சண்டைகளால் பழிக்குப்பழி வாங்கும் எண்ணத்திலிருந்து அனைத்துச் சாதியினரும் அமைதியை விரும்புபவர்களாகக் கதை மாந்தர்கள் படைக்கப்பட்டிருப்பது சந்திரபோஸின் சோசலிச யதார்த்தத்தைக் காட்டுகிறது. இருப்பினும் அறச்சீற்றமும், சிறுமை கண்டு பொங்கும்

மனநிலையும் அவரின் புனைகதைகள் வழியே வெளிப்படுவதை அவதானிக்க முடிகிறது.

உழைத்த வேர்வைகூடக் காயாத பொழுதுகளில்கூட யோனியில் அமுதம் கடைந்து உண்ணத் துடிக்கும் மேட்டுக்குடியினரின் போக்கைக் கதையில் பதிவு செய்து, வர்க்கப் போராட்டத்திற்கு ஆதரவானது செங்கொடி ஏந்தும் பொதுவுடைமைக் கட்சி என்று கூறுகிறார். வர்க்கப் போராட்டம் தான் ஒடுக்கப்பட்டவர்களை ஒற்றிணைக்கும் என்பதைப் புனைகதைகள் வலியுறுத்துகின்றன.

ஒடுக்கப்பட்டவர்களின் நலனுக்காகப் பாடுபடும் ஒரே இயக்கம் மார்க்சிய இயக்கம். செங்கொடி ஏந்திய பொதுவுடைமைக் கட்சிக்காரர்களின் போராட்டம் ஒரு விடியலைத் தரும் என்ற நம்பிக்கை மக்களிடம் இருப்பதையும், அடிபட்ட மனிதர்களுக்காக எந்தவித பிரதிபலனையும் எதிர்பார்க்காதக் கட்சி பொதுவுடைக் கட்சி என்பதையும் புனைகதைகளில் அழுத்தமாகப் பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

பிற சாதியினரால் பாடை கட்டப்பட்டுத் தூக்கிச் செல்கின்ற ஒடுக்கப்பட்டவரின் பிணத்தைக் காட்சிப் படுத்துவதில் சோசலிச யதார்த்தம் காணப்படுகிறது. சோசலிசம் அனைவரின் மனதிலும் நிலை கொள்ள வேண்டும் என்பதே சந்திரபோஸின் எண்ணமாக இருந்திருக்கிறது.

சாதி வெறியினால் தூண்டப்பட்டு, எதிர் சாதியினரைக் கொன்று குவித்து, பிற சாதிப் பெண்களைப் பாலியல் வன்புணர்ச்சிக்குள்ளாக்கும் மனிதர்களின் செயல்பாடுகளைச் சந்திரபோஸ் விவரிக்கும் விதத்தில் வன்முறையாளர்கள் மீது கோபம் ஏற்படும் வேளையில், ஏன் இப்படி மனிதர்கள் ஏதோ ஒன்றின் பெயரால் தங்களுடைய இருப்பினை நாசப்படுத்துவதுடன் ஆன்மாவினையும் சிதைத்துக் கொள்கின்றனர் என்ற அவரின் மனிதநேயச் சிந்தனையை அறிய முடிகிறது.

ஒரு சமூகத்தினர் பதட்டமும், இன்னொரு சமூகத்தினர் உற்சாகமும் கொள்வது பாசிசத்தின் கோரமான வெளிப்பாடுகள். இத்தகைய நிலையினைச் சந்திரபோஸ் நுணுக்கமாகப் பதிவாக்கி உள்ளார்.

சாதி இழிவின் கோரமான விளைவுகள் என்று ஆவணமாகப் பதிவு செய்வது மட்டும் சந்திரபோஸின் நோக்கமாக இல்லை. அவர் படைத்திட்ட கதாபாத்திரங்கள் வளமையிலிருந்து மீறி, மிகைப்படுத்தப்பட்ட யதார்த்தத் தளத்தில் இயங்குவதனால் வெற்றுச் சோகமும் அனுதாபமும் ஏற்படுவது தவிர்க்கப் பட்டுள்ளன. கதையாடலில் வாசிப்பின் மூலம் தோன்றும் கூர்மையான கேள்விகள் சாதி இழிவின் விளைவான மனிதர்களின் விலங்குத்தனமான செயல்களையும், அப்பாவித்தனமான போக்குகளையும் முன்னிலைப் படுத்துகின்றன. வன்முறை என்பது உடல் ரீதியில் மொழியின் வழியாகக் கட்டமைக்கப்பட்ட அதிகாரத்தின் வெளிப்பாடு

என்பதனைச் சந்திரபோஸின் கதைகள் நுணுக்கமாக வெளிப்படுத்துகின்றன.

தன்னலவாதிகளின் தன்னலத்தையும், ஆண், பெண் என்று பாகுபடுத்துவாரின் கொள்கைகளையும் சமூக நெறியில் ஒழிப்பதைச் செயல்பாடாகவும் கொண்டுள்ளது சோசலிசப் பெண்ணியமாகும். இத்தகைய பண்புநலன்களைக் கொண்ட கதைகளாக, சந்திரபோஸின் புனைகதைகள் உள்ளன என்பது பெறப்படுகிறது.

சந்திரபோஸின் புனைகதைகளின் மையமாக விளங்குவது பாலியல் கொடுமைகளும், பெண் மேல் நிகழ்த்தப்படும் வன்முறைகளும்தான். இதிலிருந்து அவர்கள் மீண்டு வரவும், எதிர்த்துப் போராடவும் வர்க்கப் புரட்சிப் பெண்களைப் படைக்கவில்லை. உணர்வு தளத்தில் இயங்குகின்ற சுயமரியாதையுள்ள உழைக்கும் ஏழைப் பெண்கள் மற்றும் அறிவுசார்ந்தத் தொழில்புரியும் பெண்களும் கதைகளின் மையப் பொருளாகப் பேசப்படுகின்றனர்.

சந்திரபோஸ் படைப்புகளில் சாதி, மதம் கடந்தக் காதல் திருமணங்களைப் பதிவு செய்துள்ள யதார்த்தம் அறிய முடிகிறது. கணவனை இழந்தப் பெண் தனக்குத் துணையாகத் திருமண பந்தம் இல்லாமல் ஓர் ஆணுடன் சேர்ந்து வாழ்வதற்கு இந்தச் சமூகம் இணக்கம் காட்டுவதில்லை. அந்த யதார்த்தத்தோடு வாழும் தன்மையை தம் படைப்புகளில் கொண்டு வந்துள்ள ஆசிரியர், பெண்களுக்குச் சுதந்திர உணர்வையும் கொண்டு வந்துள்ளார்.

பெண்கள் பல்வேறு போராட்டங்களுக்கு மத்தியில் வாழ்வியலை எதிர்நோக்குகின்றனர். ஆணாதிக்கச் சமூகத்தில் பெண் வாழ வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டுள்ளது. தன் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதில் பெண்களுக்கு பல் சிக்கல்கள் உள்ளன. பெண்களைப் பொறுத்தவரையில் திருமணம் என்பதை அவள் தன் வாழ்க்கையின் ஆதாரமாகச் சார்ந்திருக்க வேண்டியிருக்கிறது. பொதுவாக ஒரு பெண் தன்னை ஓர் ஆண் தேர்ந்தெடுப்பதற்காகக் காத்திருக்க வேண்டியிருக்கிறது என்பதைச் சந்திரபோஸின் பல புனைகதைகளின் வழி அறியலாகிறது.

துணை எழுத்து என்ற சிறுகதையில் யதார்த்த வாழ்வியலை அமைத்துக் கொள்ளும் கதாபாத்திரங்களின் முரணாக, ஆண் தலைமைப் பாத்திரம் விளங்குகிறது. ரகுராமன் மல்லிகாவின் விதவைத் தாய் காவேரியைத் திருமண பந்தமில்லாமல் வாழ்க்கை நடத்துவதும்; அதை நியாயப்படுத்துவதும் கதை சொல்லியின் செயலாக உள்ளது. ரகுராமனின் தனிப்பட்ட வாழ்க்கைக் குறித்துக் கதை சொல்லி ஏதும் கூறாமல் விட்டது நெருடலை ஏற்படுத்துவதாக ஆய்வாளர் கருதுகிறார்.

சந்திரபோஸின் புனைகதைகள் யதார்த்தமாக அமைக்கப்பட்டிருந்தாலும், சில கதைகள் வலிந்து சொல்லப்பட்டது போன்ற உணர்வு காணப்படுகின்றன.

சட்டப்பூர்வ மணமுறிவுக்குப் பின்னரும் இணைந்து வாழ வாய்ப்பு கிடைக்குமா? என்ற எதிர்பார்ப்புடன் பாத்திரங்கள்

படைத்திருப்பது போன்ற கதை நகர்வு சற்றே வேறுபட்டுக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. திருமணம் ஒரு பெண்ணிற்கு எத்தகையப் பாதுகாப்பை அளிக்கவல்லது என்பதை மணமுறிவுக்குப் பின்னரே பெண் பாத்திரம் உணர்வதாகக் காட்டியுள்ளார். யதார்த்த வாழ்வியலாக இருப்பினும் பிற்போக்குத் தன்மையாகவும் காணப்படுகின்றது.

மண வாழ்வில் கணவனால் ஏற்பட்ட சிக்கல்களால் அவனிடமிருந்து விலகியிருக்கும் அவள், திருந்திய கணவனாக வந்தும் அவனை ஏற்க மனம் மறுத்தப் தீவிரவாதப் பெண்ணியவாதியையும் படைத்துள்ளார். வேறொருவனுடன் குடும்பம் நடத்திய பின்னர், வறுமையின் பிடியிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள மீண்டும் கணவனுடன் வந்து சேர்ந்து வாழும் அடித்தட்டு மக்களின் யதார்த்தத்தையும் படைத்துள்ளார். இருவேறு முரண்பட்ட பாத்திரங்களைத் தம் படைப்பில் கொணர்ந்துள்ளார்.

மறுமண உரிமை, திருமணவிலக்கு உரிமை, கலப்புமண உரிமை ஆகிய மூன்று உரிமைகளும் பெண்ணியச் சிந்தனைகளாகும். மறுமண உரிமை எனும் மையக் கருத்தையே கருவாகக் கொண்டு புதினம் படைத்துள்ளார். பெண் என்பவள் ஒருவனைத் திருமணம் செய்து கொண்ட பிறகு, விருப்பம் இருந்தாலும் இல்லையென்றாலும் அவனுடனேயே வாழ வேண்டும் என்ற மரபைச் சமூகம் வலியுறுத்துகின்றது. ஆனால் எழுத்தாளர் சந்திரபோஸ் அம்மரபை மீறித் தனக்கு விருப்பமானவனைப் பெண் திருமணம் செய்து கொள்ளலாம் என்ற கருத்தை வலியுறுத்துகிறார். திருமணமான ஒரு

பெண், தன் ஊதாரிக் கணவனை உதறித் தள்ளிவிட்டு, வேறொரு திருமணம் செய்து கொள்ள உரிமை வழங்கியது பாராட்டுக்குரியது.

குடும்பச் சூழலில் ஒரு பெண்ணிற்கு உண்டாகும் சிக்கல்களுக்குக் கணவன் அடிப்படைக் காரணமாக அமைகிறான். கணவன், மனைவிக்கிடையே நிகழும் சிக்கல்களில் கணவனின் கொடுமை புனைகதையில் காணலாகிறது. மனைவியை ஐயுறும் கணவனைக் காட்சிப்படுத்தியுள்ளார். மனைவியினால் அல்லலுறும் கணவனைப் படைக்காமல் தானொரு பெண்ணியவாதி என்பதை உறுதிப்படுத்தியுள்ளார்.

கணவனின் உறவில் கரைந்து போன நாட்களில் வயோதிகமே ஆனாலும் இளமைத் துடிப்பானவை. பாசத்திற்கும், காதலுக்கும் வயதில்லை என்பதைப் பத்மாவதி பாட்டி என்ற பாத்திரத்தின் வழி படைத்துள்ளமை அவரின் அன்பின் வழியது உயிர்நிலையைக் காட்டுகிறது.

சோசலிச யதார்த்தத்துடன் பழகும் நட்பிற்கு ஆண், பெண் என்ற பாகுபாடு தெரியாது என்பதை ரேணு - கண்ணபிரான் பாத்திரங்கள் எடுத்துக்காட்டுகின்றன. திருமணம் என்பது தனிமனிதனின் வாழ்விலும் ஒரு குடும்ப வரலாற்றிலும் மிக முக்கியமான நிகழ்ச்சி. இது பெண்ணின் அடிப்படைத் தேவைகளுள் ஒன்றாக விளங்குகிறது. குடும்பம் என்கிற அமைப்பில் ஆண் கணவனாகத் தான் இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. அவன் ஒரு நண்பனாகவும் இருக்கலாம். இந்த நட்பு உறுதிப்படுகிற

பொழுது பிரிக்க முடியாத உறவாகக் குடும்பம் வளரும். ஆண் பெண் புரிதலுக்குள் தோல்வியோ, ஏமாற்றமோ ஏற்படுகின்ற பொழுது நண்பர்களாகவே பிரிந்து விட வாய்ப்பு ஏற்படுகிறது என்ற முத்தாய்ப்பைப் புனைகதைகள் வழி உணரமுடிகிறது.

வேலைக்குச் செல்லும் பெண்களின் சிக்கல்களையும், அதனால் அவர்கள் வாழ்க்கையில் ஏற்படும் மாற்றங்களையும் பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

தலித், மார்க்சிய, சோசலிசம் குறித்து விளக்கப் பெற்றுள்ளது. மார்க்சியம் அனைத்துப் பிரச்சினைகளையும் பொருளாதார அடிப்படையில் நோக்குகிறது. கம்யூனிசம் சோசலிசத்தின் ஒரு வடிவமாகும். தகுதிக்கேற்ற வேலை; உழைப்பிற்கேற்ற ஊதியம் என்பது சோசலிசம் ஆகும். சோசலிசம் என்பது முதலாளித்துவத்திலிருந்து கம்யூனிசத்திற்கு இடைநிலை காலத்தில் சமூகத்தின் நிலையாக அறியப் பெறுகிறது.

பிறப்பால் ஒடுக்கப்பட்ட இனத்தைச் சார்ந்த சந்திரபோஸின் புனைகதைகளில் தலித்திய உணர்வுகள் வெளிப்பட்டுள்ளமை யதார்த்தமாகும். இவரின் படைப்புகள் வெவ்வேறு தளங்களில் பிரச்சினைகளை எதிர்கொண்டுள்ளன. சில இடங்களில் தலித் மக்களின் துயரங்களும் அவலங்களும் கதைக்களனாகும் நிலையில் காத்திரமான அரசியல் வெளிப்பாடு புனைகதைகளில் வெளிப்படுகின்றன. தமிழ்ப் பண்பாட்டுச் சூழலை மையமிட்டு சந்திரபோஸின் புனைகதைகள் தமக்கான வாசகர்களைத் தேடிக் கொண்டிருக்கின்றன.

விளிம்புநிலையினரைக் கருவாகக் கொண்டு புதியதான உத்திகளைக் கையாண்டுள்ள சில சோதனைப் புதினங்கள், தமிழ்க் கதையாடல் மரபை மாற்றி அமைத்துள்ளன என்பதற்குச் சான்றுகளாகவே சந்திரபோஸின் படைப்புகள் இருக்கின்றன என்பது பெறப்படுகிறது.

வெறுமனே கதைசொல்லியால் யதார்த்தமாகச் சொல்லப் பட்டுள்ள சில கதைகள், வாசிப்பதற்கு அலுப்பை ஏற்படுத்தவும் செய்கின்றன.

சந்திரபோஸின் 'பிரபஞ்ச கானம்' என்னும் புதினம் தன்னிலை விளக்கப் புதினமாகக் காண்படுகிறது. சுயவரலாறா? அல்லது புனைகதையா என்ற ஐயம் ஏற்படும் அளவிற்குக் கதையோட்டம் அமைந்துள்ளது.

அரசியலில் பொதுவுடைமைக் கட்சியின் யதார்த்தம் குறித்துக் கவலைப்படும் சந்திரபோஸ், ஆதங்கத்தையும் வெளிப்படையாகக் கூறுகிறார். ஒரு வர்க்கப் போராட்டத்தை வென்றெடுக்கும் கதைக்களத்தையும் படைப்புகளில் கொண்டு வந்துள்ளார் ஆசிரியர்.

பொதுவுடைமைக் கட்சியினரின் பொறுப்புணர்ச்சியைக் காட்டும் சந்திரபோஸ், உணர்ச்சிகரமான சூழ்நிலையில் மக்களை ஒன்றிணைக்கும் சக்தி படைத்தவர்களாக இருப்பதையும் காட்டத் தவறவில்லை.

இவரின் புனைகதைகள் கற்பனைக் கதைகளாக இருக்க வாய்ப்பில்லை. அவரைக் கடந்து சென்ற மனிதனின் கதையாகவும் இருக்கலாம். அவருக்கு ஏற்பட்ட ரணங்களின் கதைகளாகவும் இருக்கலாம். ஏனெனில் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தின் அடிப்படையில்; தான் சார்ந்த இயக்கத்தின் வழி ஏற்பட்ட அனுபவத்தின் அடிப்படையில் தான் புனைகதைகளை அவர் படைத்திருக்க வேண்டும். அவைகள் புனைவுகள் அல்ல; அத்தனையும் யதார்த்தமாகும்.

மிகை யதார்த்தப் போக்கைக் கையாளவில்லை என்பதற்கு அவரின் கதைகளில் காணப்படும் பாத்திரங்களின் பெயர்களை வைத்தே கணக்கிடலாம். மேற்சாதிப் பாத்திரங்களின் பெயர்கள் வீரப்ப நாயக்கர், சர்மா ஐயர், நாகலிங்கம், துரைசாமி… ஒடுக்கப்பட்டவர்களின் பெயர்களாகக் குத்திபகடை, காலாடிக் குடும்பன், சுந்தரலிங்கக் குடும்பன், மாரிமுத்து, வேலம்மா, தங்கம்மா… போன்ற பெயர்கள் கதைகளில் காணப்படுகின்றன.

காலங்காலமாக ஒடுக்கப்பட்டவர்களின் பெயர்கள் ஒருமையில் அழைப்பது போலவும், மேல்சாதியினரின் பெயர்கள் மரியாதை கலந்து வருவனவாகவும் அமைக்கப்படுகின்றன. இதில் இவரும் விதிவிலக்கல்ல. ஒடுக்கப்பட்டவர்களில் பார்த்தசாரதி கிடையாது. பார்த்தசாரதியைக் குடிகாரனாகக் காட்டவியலாது. குடிகாரன் என்றால் குப்பன், சுப்பன் தான் என்ற எண்ணம் எழுத்தாளர்களுக்கு ரத்தத்தில் ஊறி, நினைவில் வரும் போலும் என்ற கருத்தும் உள்ளது.

அவர் படைக்கும் பாத்திரங்களின் பெயர்களில் தான் சார்ந்த சமூகத்தின் அடையாளத்தைக் காட்டுவதற்கு மறக்கவில்லை. சுந்தரலிங்கம் என்ற சுதந்திர காலப் போராளியை, வர்க்கப் போராளியின் பாத்திரத்தில் படைத்திருப்பதை அறிய முடிகிறது. பள்ளர்கள் கச்சைக்கட்டி ஆடுவது அவர்களின் உரிமை என்பதன் காரணமாக, அவரின் சில கதைகளில் இவை கையாளப்பட்டுள்ளன என்பதும் ஆய்வில் பெறப்படுகிறது.

கதைகள் யாவும் யதார்த்தம் நழுவிவிடாத கதைகள். இயல்பான நடை ஓட்டத்திலும், பாத்திரங்கள் பேசும் வட்டார வழக்கிலும் போகிற போக்கில் கதை நிகழ்வை நகர்த்திச் செல்வதிலும் ஆசிரியரின் திறமையைக் காணமுடிகிறது.

சிற்றூர் மக்களிடையே இன்னும் மரபு மாறாத பண்புகள் ஆண்டாண்டு காலமாய்ப் பாசியாய்ப் படிந்தும், படர்ந்தும், கிடப்பதும், அதனை அகற்ற நினைப்போரின் செயற்பாடுகள் தீவிரமடைவதும் கதைகளில் காணப்படுகின்றன.

ஆசிரியர் வாழ்ந்த சிவகாசிப் பகுதி மண்ணில் வாழ்ந்த; தன்னைக் கடந்து, நடந்து சென்ற மனிதர்களின் கதைகள் தான் இவரின் பேனாவுக்குள் நுழைந்திருக்கின்றன என்றளவில், கதைகள் கரிசல் இலக்கியமாக இருக்கின்றன என்பது ஆய்வில் உணரப் பெறுகின்றது.

எந்தவொரு படைப்பும் அதன் பின்புலமாகச் செயல்படும் சமூக, அரசியல், பொருளாதாரக் கண்ணோட்டத்துடன் ஆராயப்பட

வேண்டும். அவ்வகையில் இங்குப் படைப்பு மற்றும் படைப்பாளர் செயல்பட்டதன் சமூகப் பின்புலம் ஆராயப்படுகின்றன. படைப்பாளர் கதைமாந்தர்களைத் தம் கதைகளில் சித்திரிக்க முற்படும் போதும், அவர்களை முன்மாதிரிகளாகப் படைக்கும் போதும், எப்பிரிவைச் சார்ந்த சாதி மாந்தர்களை முன்வைக்கிறார் எனும் கேள்வியும் அதற்கான காரணங்களும் ஆராயப்பட வேண்டும்.

படைப்பாளர் எந்தச் சாதிப்பிரிவைச் சார்ந்த கதைமாந்தர்களைத் தம் படைப்புகளில் முன்மாதிரிகளாகச் சித்திரித்துள்ளார் எனும் போது, பெரும்பான்மையும், சமூகத்தில் ஒடுக்கப்பட்ட மேலும், தான் சார்ந்த இனத்து மாந்தர்களையே சித்திரித்துள்ளார் என்பதும் சுட்டத்தக்கது.

தான் படைத்த கதாநாயகன் மீதே படைப்பாளி மோகம் கொண்டுவிடக் கூடாது. அவனை ஏற்றிப் போற்றிப் புகழத் துவங்கிவிடக் கூடாது. எல்லா பாத்திரங்களும் லட்சியப் பாத்திரமாகப் படைக்கப்பட்டிருக்கிறது என்றாலும் அதில் ஓரளவாவது தனிமனிதத் தன்மைகள் உள்ளன. ஆனால் ஐப்பசி மேகங்கள் என்ற புதினத்தில் வரும் கதை நாயகன் கண்ணபிரான் பாத்திரம் கதைத் தலைவனின் புகழ் பாடிக் கொண்டிருக்கிறது. இது சற்று நெருடலாக உள்ளது.

சந்திரபோஸின் எழுத்துக்களை அடுத்தத் தலைமுறைக்கு எடுத்துச் செல்லல் வேண்டும். அவர் நூல்கள் அனைத்தும் மறுபதிப்பு செய்து உலகறியச் செய்வற்கேற்றப் படைப்புகள் எனலாம்.

*சந்திரபோஸின் புனைகதைகளின் கதைக்கரு, கதைப்பின்னல், எழுத்து நடை, வருணனை, உத்தி, பாத்திரப் படைப்பு, உளவியல், கதைசொல்லியின் தனிக் கருத்துக்கள் குறித்து மேலாய்வு செய்வதற்கு இவ்வாய்வு துணை செய்கின்றது.*

## துணைநூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்


1. சந்திரபோஸ்.ஆ. — ஒரு அன்னையின் காணிக்கை, நாதன் பதிப்பகம், 3/1,-1183, 29ஆம் குறுக்குத்தெரு திருவான்மியூர், சென்னை-14. முதல் பதிப்பு ஏப்ரல் 2008.

2. மேலது, — நெஞ்சிலாடும் மலர்கள் (புதினம்), விழிகள் பதிப்பகம், 8,எம், 139, 7ஆவது குறுக்குத் தெரு, சென்னை - 41. முதல் பதிப்பு 2009.

3. மேலது — பிரபஞ்ச கானம் (புதினம்) ஸ்ரீசெண்பகா பதிப்பகம், தபால் பெட்டி எண்:8836, பாண்டி பஜார், சென்னை-17. முதல் பதிப்பு ஏப்ரல் 2010.

4. மேலது — ஐப்பசி மேகங்கள் (புதினம்) நாதன் பதிப்பகம், 3/1,-1183, 29ஆம் குறுக்குத்தெரு திருவான்மியூர், சென்னை-14. முதல் பதிப்பு ஏப்ரல் 2010.

5. மேலது — நந்தியாற்றங்கரையும் கரை சேரும் ஓடங்களும் (2 குறும்புதினங்கள்) விழிகள் பதிப்பகம், 8,எம், 139, 7ஆவது குறுக்குத் தெரு, சென்னை - 41. முதல் பதிப்பு 2011.

6. சந்திரபோஸ். ஆ.
இன்னொரு சாட்சி,
(சிறுகதைகள்)
நாதன் பதிப்பகம்,
3/1,-1183, 29ஆம் குறுக்குத்தெரு
திருவான்மியூர், சென்னை-14.
முதல் பதிப்பு ஏப்ரல் 2011.

7. மேலது
ஜேம்ஸ் வாத்தியார்
(சிறுகதைகள்),
அன்னைமுத்தமிழ்ப் பதிப்பகம்,
96, பெரியார் சாலை,
பாலவாக்கம், சென்னை-41,
முதல் பதிப்பு ஏப்ரல் 2011.

8. மேலது
அறிதலும் அடைதலும்,
வாழ்வியல் ஆராய்ச்சிக்
கட்டுரைகள்,
அன்னைமுத்தமிழ்ப் பதிப்பகம்,
96, பெரியார் சாலை,
பாலவாக்கம், சென்னை-41,
முதல் பதிப்பு ஏப்ரல் 2011.

9. சந்திரபோஸ்.ஆ.
நடுநல்நாடன் (தொ.ஆ.)
களவு போன கனவு,
(அந்தத் தலைவாசலுக்குக்
கோலமிடுங்கள்)
(குறும்புதினங்கள்),
அன்னைமுத்தமிழ்ப் பதிப்பகம்,
96, பெரியார் சாலை,
பாலவாக்கம், சென்னை-41.
முதல் பதிப்பு நவம்பர் 2011.

10. சந்திரபோஸ்.ஆ.
தகுதிப் பிழை (குறும்புதினம்),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை- 98,
முதல் பதிப்பு நவம்பர் 2012.

## துணைமைச் சான்றாதாரங்கள்


*1.* அருணன், — மார்க்சிய அழகியல்,
வசந்தம் வெளியீட்டகம்,
69/24ஏ, அனுமார் கோவில் படித்துறை,
சிம்மக்கல், மதுரை - 1,
இரண்டாம் பதிப்பு 2009.

*2.* அமர்ந்த்தா (தமிழில்)
(மார்த்தா ஆர்னெக்கார்) — இருபத்தொன்றாம் நூற்றாண்டு
சோசலிசம் ஐந்து சிந்தனைகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை- 98,
முதல் பதிப்பு சனவரி 2014.

*3.* உதயகுமார் (தமிழில்)
(ஜேம்ஸ் பெட்ராஸ்) — பின் மார்க்சியவாதிகள்,
ஒரு மார்க்சிய விமர்சனம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை- 98,
முதல் பதிப்பு ஆகஸ்ட் 2016.

*4.* கேசவன். கோ. — இலக்கிய விமர்சனம்,
ஒரு மார்க்சியப் பார்வை,
அன்னம் (பி) லிட்,
சிவகங்கை 630 560,
முதற்பதிப்பு மே 1984.

*5.* சந்திரபோஸ். ஆ. — தமிழ் சினிமா: சில
பார்வைகளும் சில பதிவுகளும்,
சகுந்தலை பதிப்பகம்,
டி2/1, கைலாசபுரம் டவுன்சிப்,
திருச்சிராப்பள்ளி - 14,
முதற்பதிப்பு நவம்பர் 2008.

6. சிசுபாலன். இரா. — சோசலிசம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை- 98, முதல் பதிப்பு ஆகஸ்ட் 2012.

7. சிவத்தம்பி. கா. — தமிழில் சிறுகதை தோற்றமும் வளர்ச்சியும், தமிழ் புத்தகாலயம் சென்னை-600 005, 1967.

8. சுசிலா.எம்.ஏ. — பெண் இலக்கியம் வாசிப்பு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, முதற்பதிப்பு 2001.

9. சேதுமணி மணியன், — தமிழ் நாவல்களில் மதிப்புகள், செண்பகம் வெளியீடு, மதுரை, 1990.

10. ஞானசேகரன்.தே. முனைவர். — தலித் சிந்தனை விவாதம், மாமன்னர் பதிப்பகம், பாரதியார் பல்கலைக்கழகம், கோயமுத்தூர், ஆகஸ்ட் 2000.

11. மேலது — மள்ளரியமும் இலக்கியமும், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், சென்னை மையம், அம்பத்தூர், சென்னை, 2000.

12. மேலது — மள்ளர் சமூக வரலாறு, தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம், சோழவந்தான், மதுரை மாவட்டம், டிசம்பர் 2001

13. ஞானமூர்த்தி. தா.ஏ. — இலக்கியத் திறனாய்வியல், ஐந்திணைப் பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை - 5, இரண்டாம் பதிப்பு 1986.

14. தாயம்மாள் அறவாணன். — பெண் இன்று நேற்று, அன்று, பச்சைப்பசேல், 11, இரண்டாம் தெரு, மோகன் நகர், புதுச்சேரி - 5, முதற்பதிப்பு ஆகஸ்ட் 2003.

15. நம்பூதிரிபாட்.இ.எம்.எஸ். — மார்க்ஸ் பார்வையில் இந்தியா, பாரதி புத்தகாலயம், சென்னை, மூன்றாம் பதிப்பு 2009.

16. பத்ம பிரியா. மா. — பெண்ணிய இலக்கியப் பதிவுகள், பாவை பப்ளிகேசன்ஸ், 142, ஜானி, ஜான் கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை-14, முதற்பதிப்பு ஜூலை 2010.

17. பத்மினி. ப. — மறக்கப்பட்ட பதிவுகள், வெளியீடு: புலம், 332/216, திருவல்லிக்கேணி, சென்னை-5. முதற்பதிப்பு மே 2016.

18. பாண்டியன். தா. — சமுதாயமும் பண்பாடும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,அம்பத்தூர், சென்னை- 98, முதல் பதிப்பு நவம்பர் 2012.

19. பிரேமா.இரா. — பெண்ணியம்,
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
டி.டி.ஐ. தரமணி,
சென்னை,
முதற்பதிப்பு அக்டோபர் 1994.

20. பெரியார். — பெண் ஏன் அடிமையானாள்,
பெரியார் சுயமரியாதைப் பிரச்சார
வெளியீடு,
முதற்பதிப்பு 1992.

21. பெருமாள். எஸ்.ஏ. — மார்க்சியத் தத்துவம் - ஓர் அறிமுகம்,
பாரதி புத்தகாலயம்,
சென்னை,
டிசம்பர் 2004.

22. பொன்னம்பல அடிகளார், — சமய வாழ்வு,
திருமாறன் நிலையம்,
7/8, பீட்டர்ஸ் குடியிருப்பு,
ராயப்பேட்டை, சென்னை - 14.
1999.

23. மார்க்ஸ் . ஆ — தலித் அரசியல் -
அறிக்கையம் விவாதமும்,
புத்தா வெளியீட்டகம்,
கோவை - 2ம் பதிப்பு
அக்டோபர் - 1995.

24. முத்துமோகன். ந. — பின்னை நவீனத்வமும்
மார்க்சியமும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை- 98,
முதல் பதிப்பு டிசம்பர் 2014.

25. முருகேச பாண்டியன்.ந. நவீனப் புனைகதைப்போக்குகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை- 98, முதல் பதிப்பு டிசம்பர் 2014.

26. மோகன், க., கள்ளிப்பாலுக்கப்பால், நிதிஷ்பிரபா பதிப்பகம், 66/1, ரயில்வே-காலேஜ் ரோடு, காரைக்குடி - 630 003, முதற்பதிப்பு ஏப்ரல் 2011.

27. ரவிக்குமார். (தொ.ஆ.), தலித் கலை இலக்கியம் அரசியல், தலித் கலை விழாக் குழு, நெய்வேலி மார்ச் 1996.

28. இரயாகரன். பி. ஆணாதிக்கமும் பெண்ணியமும், கீழைக்காற்று வெளியீட்டகம், சென்னை -2, முதற்பதிப்பு டிசம்பர் 2001.

29. இராமலிங்கம். மா நாவல் இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1972.

30. ரவிக்குமார். (தொ.ஆ.), தலித் கலை இலக்கியம் அரசியல், தலித் கலை விழாக் குழு, நெய்வேலி, மார்ச் 1996.

31. ராஜதுரை. எஸ்.வி. தலித்தியமும் உலக முதலாளியமும், விடியல் பதிப்பகம், கோயம்புத்தூர், அக்டோபர் 2001.

32. ராஜதுரை. எஸ்.வி.(மொ.ஆ) கார்ல் மார்க்ஸ் மூலதனம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை- 98,
முதல் பதிப்பு ஆகஸ்ட் 2016.

33. மேலது, ஏகாதிபத்திய எதிர்ப்பும் சாதி ஒழிப்பும்,
(ஆனந்த் டெல்டும்ப்டெ),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை- 98,
முதல் பதிப்பு ஜூலை 2015.

34. வானமாமலை. நா. மார்க்சிய ஆய்வுகள்,
முத்து புக்ஸ்,
அச்சுதன சீனிவாசா அடுக்ககம்,
16/22, இரண்டாம் குறுக்குத்தெரு,
டிரஸ்ட்புரம்,
கோடம்பாக்கம், சென்னை-24,
முதற்பதிப்பு 2013.

35. மேலது தமிழ்நாட்டில் சாதி சமத்துவப் போராட்டக் கருத்துக்கள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை- 98,
முதல் பதிப்பு ஜூலை 2015.

36. வேல்சாமி. பொ. மார்க்ஸ். அ. தமிழ் இலக்கியப் பாரம்பரியத்தில் சாதி எதிர்ப்புக் குரல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை- 98,
முதல் பதிப்பு ஜூலை 2015.

| | |
|---|---|
| ***37.*** *ஜெயசுதா. தி.* | *அடக்குமுறையும், எதிர்ப்புக் குரல்களும்,<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை- 98,<br>இரண்டாம் பதிப்பு டிசம்பர் 2012.* |
| ***38.*** *ஹேமா* | *பெண்களும் சோஷலிஸமும்,<br>(ஆகஸ்டு பேபல்)<br>பாரதி புத்தகாலயம்,<br>7. இளங்கோ சாலை,<br>தேனாம்பேட்டை, சென்னை - 18,<br>டிசம்பர் 2016.* |

**ஆங்கில நூல்கள்**

| | |
|---|---|
| ***39.*** Altekar.A.S. Dr. | The Position of Women in Hindu Civilization,<br>Motilal Bunarsidass, Delhi, 1987. |
| 40. Emile Burns | What is Marxism?<br>International Book shop Pvt Ltd,<br>180, Exhibition Street, Melbourne,<br>Australia.<br>1945. |

**ஆய்வேடுகள்**

| | |
|---|---|
| ***1.*** *உமாதேவி. இரா.* | *மள்ளரிய இலக்கியப் போக்குகள்<br>(1995-2005)<br>மனோன்மணியம் சுந்தரனார்<br>பல்கலைக்கழக முனைவர்பட்ட<br>ஆய்வேடு.* |
| ***2.*** *சார்லஸ் சகாயராஜ்* | *ஸ்ரீதரகணேசனின் விரிசல்,<br>காரைக்குடி அழகப்பா<br>பல்கலைக்கழக ஆய்வியல் நிறைஞர்<br>ஆய்வேடு.* |

*3 .செந்தாமரை. சு.* — *க.பஞ்சாங்கத்தின் படைப்புலகம், பாரதியார் பல்கலைக்கழக முனைவர் பட்ட ஆய்வேடு, கோயம்புத்தூர், ஜூலை 2013.*

*4. செல்வராணி. கா.* — *ஆ.சந்திரபோஸ் சிறுகதைகள், காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக ஆய்வியல் நிறைஞர் ஆய்வேடு.*

*5. இராசலெட்சுமி.சு.* — *சோலை சுந்தரபெருமாளின் படைப்புகளில் மண்ணும் மக்களும், காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக முனைவர்பட்ட ஆய்வேடு.*

*6. விமலா* — *சந்திரகாந்தனின் தழல், காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக ஆய்வியல் நிறைஞர் ஆய்வேடு.*

**அகராதிகள்**

*1. .............* — *க்ரியாவின் தற்காலத் தமிழ்ப் பெயரகராதி, ஏ.268, ராயப்பேட்டை ஹைரோடு, சென்னை -14, 1994.*

*2. .............* — *தமிழ்ப் பேரகராதி, தொகுதி 4, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, - 1938.*

*கலைக்களஞ்சியங்கள்*

*1.* — *வாழ்வியற் களஞ்சியம் தொகுதி* (II, V, X), *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2001.*

2. கலைக்களஞ்சியம்,
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை,
1958-59.

## இதழ்கள்

1. உமாசங்கர், எஸ்., மருத மலர் (மாத ஏடுகள்),
அண்ணாநகர், திருநெல்வேலி.

2. குருசாமி சித்தன், முனைவர், மள்ளர் மலர் (மாத இதழ்கள்)
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயமுத்தூர்.

3. செந்தில் மள்ளர், மண்ணுரிமை ( மாத இதழ்கள்)
மள்ளர் மீட்புக் கழகம்,
தூத்துக்குடி.

## மலர்

1. மீண்டெழும் மள்ளர் வரலாறு,
வெளியீடு: திருமதி மங்கையர்கரசி
கல்வி அறக்கட்டளை,
திருச்சிராப்பள்ளி-3.

2. மானுடம்பாடிய வானம்பாடி
மேலக்கோனம்பட்டி
எழுத்தாளர் ஆ.சந்திரபோஸ் அவர்கள்
நினைவு அறக்கட்டளை
நினைவு மலர்,
காரைக்குடி.

## இணையதளம்

1. www.scheduled tribes in tamilnadu

2. http/: palangudikal - Indu malayalikal

**சந்திரபோஸ் படைப்புகளில் சோசலிச யதார்த்தவாதம்**

**– முனைவர்பட்ட ஆய்வு நேர்காணல்**

**ஆய்வாளர்:**

திரு கண்ணன்
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி -3.

**தகவலாளர்:**

திருமதி. பிருந்தாரமணி
தலைமை ஆசிரியை
(ஆசிரியரின் அண்ணன்மகள்)
காரைக்குடி.

தேதி: 27.09.2017
15.10.2017

**1. திரு.சந்திரபோஸ் அவர்களின் பிறப்பு, வளர்ப்பு, பணி, குடும்பச்சூழல் பற்றிக் கூறவும்.**

விருதுநகர் மாவட்டம், மேலக்கோனம்பட்டி என்னும் சிற்றூரில் எளிய குடும்பத்தில் 07.05.1946ஆம் ஆண்டு பிறந்தவர். அவருடைய தந்தையார் பெயர் ஆண்டியப்பன், தாயார் பெயர் இராக்கம்மாள். அவருடைய மூத்த சகோதரர் பாலசுந்தரராஜ், தமக்கையார் இராசலெட்சுமி ஆவார். அவர் 12.03.2012 அன்று உடல்நலக்குறைவால் இயற்கை எய்தினார்.

அவர் வெள்ளைச்சாமி நாடார் கல்லூரியில் (PUC) புதுமுக வகுப்புவரை பயின்றுள்ளார். மணவாழ்க்கையில் விருப்பம் இல்லாமல், கடைசிவரை திருமணம் ஆகாமல் எழுத்துப் பணிக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார்.

அவருடைய சகோதரர் பாலசுந்தரராஜ் கூட்டுறவுத் தணிக்கைத் தீர்வைத் துறையில் உதவி இயக்குநராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். சகோதரி இராசலெட்சுமி சமூகநலத்துறையில் சத்துணவு அமைப்பாளாராகப் பணியாற்றுகிறார்.

**2. திரு.சந்திரபோஸ் அவர்களின் முதல் படைப்பு எது ?**

அவரின் முதல் புதினம் - கரைசேரும் ஓடங்கள்

முதல் சிறுகதை - உழைப்பின் பிரதிபலன் நட்டம் என்பதாகும்.

**3. இதுவரை எத்தனைப் படைப்புகள் அவர் வெளியிட்டுள்ளார்?**

100க்கும் மேற்பட்ட சிறுகதைகள், புதினம் மற்றும் குறும்புதினம் என்ற வகையில் 17 படைப்புகள் படைத்துள்ளார். கவிதை நூல் ஒன்றும், திரைப்படம் சார்ந்த விமர்சனக் கட்டுரை நூல் ஒன்றும் வெளியிட்டுள்ளார்.

**4. திரு.சந்திரபோஸ் அவர்களின் படைப்பிற்கான களங்கள் எவை?**

சிவகாசிப் பகுதி மனிதர்களின் கதைகள் தான் படைப்பிற்கான களங்களாகும். இருப்பினும், பிற பகுதிகளும் கதைக்களனாகும்.

**5. திரு.சந்திரபோஸ் அவர்களின் படைப்புகளில் உங்களை மிகவும் கவர்ந்தது எது? ஏன்?**

நந்தியாற்றங்கரை கிராமங்கள் என்ற புதினம் தான் என்னை வெகுவாகக் கவர்ந்தது. காரணம் சாதிய அடக்குமுறையில் அல்லலுற்ற கிராமத்தைச் சமத்துவ நோக்கில் ஒன்றிணைக்கும் ஆசிரியரின் சோசலிசம் என்னைக் கவர்ந்ததாகும்.

**6. சில படைப்புகள் 'வண்டல் இலக்கியம்' என்கிறார்களே, அவரின் படைப்புகள் சிவப்பு இலக்கியம் அல்லது சாதிப் பெருமித எதிர்ப்பு இலக்கியம் என்று கூறலாமா?**

கூறலாம். ஆனால் ஆசிரியர் வாழ்ந்த சிவகாசிப் பகுதி மண்ணில் வாழ்ந்த; தன்னைக் கடந்து, நடந்து சென்ற மனிதர்களின் கதைகள் தான் இவரின் பேனாவுக்குள் நுழைந்திருக்கின்றன. **கரிசல் வட்டார வழக்கைத் தாண்டிக் கதைக் களங்களை விரிந்த இலக்கியப் படைப்பாளி.** சாதிப் பெருமித எதிர்ப்பு இலக்கியம் என்பதைவிட சாதி சமத்துவ இலக்கியம் என்றுதான் கூறவேண்டும். ஏனெனில், அவர் எப்போதும் எந்த சாதிக்கும், சாதியினருக்கும் எதிரானவர் இல்லை என்பதை நேரிலும், அவரின் படைப்பிலும் உணர்ந்திருக்கிறேன்.

**7. திரு.சந்திரபோஸ் அவர்களின் மொழிநடையைப் பற்றிக் கூறவும்.**

மக்களின் வட்டார மொழிநடையே அவரின் மொழிநடையாக இருக்கிறது. இருப்பினும், சில படைப்புகளை நோக்கும் போது, மணிபிரவாள மொழி ஆளுமை அவரிடம் வெளிப்பட்டிருப்பதையும் அறிகிறேன்.

**8. மகளிர் பற்றிய திரு சந்திரபோஸின் மதிப்பீடுகளைக் கூறவும்.**

பெண்கள் புரட்சிகரமாக இருக்க வேண்டும். பெண் அடிமைத்தனம் இருக்கக்கூடாது. பெண்கள் கல்வி கற்பதற்கு முன்னுரிமை கொடுக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார்.

**9. தந்தை மகள் உறவு தவிர்த்து, ஒரு வழிகாட்டியாகத் தங்களுக்குக் கூறிய அறிவுரைகள், தங்கள் முன்னேற்றத்திற்கு அவரின் பங்கு குறித்து கூறலாமா?**

என்னுடைய முன்னேற்றத்திற்கு ஆளுமைத் திறன் பற்றி எடுத்துரைப்பார். பெண்கள் எதற்கும் அஞ்சாமல் இருக்க வேண்டும் எனக் கூறுவார். பெண், கல்வி பெற்றால்தான் குடும்பம் நல்ல நிலைக்கு வர முடியும் எனப் பல அறிவுரைகள் கூறியுள்ளார்.

**10. இன்றைய இலக்கியப் (தலித்தியம், பெண்ணியம்) போக்குப் பற்றி அவர் ஏதேனும் தங்களோடு பகிர்ந்து கொண்டுள்ளாரா?**

இலக்கியம் பற்றி அதிகம் என்னுடன் பகிர்ந்ததில்லை. ஆனாலும், சமூகத்தில் நிலவும் இன்னல்களை எனக்குச் சுட்டிக் காட்டிக் கொண்டே இருப்பார். இலக்கியம் பற்றி உரையாடும் போது வருத்தம் தெரிவித்தது உண்டு. இப்போது உள்ள இலக்கியங்கள் முற்போக்குச் சிந்தனை இல்லாமல் இருப்பதைக் கூறுவார். நவீன இலக்கியத்தில் யதார்த்தம் இல்லை என்பதைக் கூறுவார்.

**11. திரு.சந்திரபோஸ் அவர்களின் படைப்புகளைப் பற்றி நேரடியாக விமர்சனங்கள் வந்துள்ளனவா?**

வந்துள்ளது. இவரின் சினிமா பற்றிய விமர்சன நூல் குறித்து இயக்குநர் பாலுமகேந்திரா விமர்சனம் செய்துள்ளார்.

**12.திரு.சந்திரபோஸ் அவர்களின் படைப்புகள் குறித்து அதிகார வர்க்கத்தின் செயல்பாடுகள் ஏதேனும் உள்ளனவா?**

அதிகார வர்க்கம் என்பது கிடையாது. அதிகார வர்க்கத்தின் குறுக்கீடுகளும் கிடையாது.

**13. உண்மைச் சம்பவங்களை எழுதும் போது சம்பந்தப்பட்டவர்களால் அவருக்கு எதிர்ப்புகள் தோன்றியுள்ளனவா?**

இல்லை.

**14. கலப்புத் திருமணங்கள் பற்றிய அவரின் கருத்து ஏதேனும் கூறமுடியுமா?**

கலப்புத் திருமணம் செய்வதில் அவருக்கு உடன்பாடு உண்டு.

**15. தலித்துக்கள் அரசு சலுகைகளைப் பெற்று முன்னேறிய பின், பிற மதங்களுக்கு மாறுவது பற்றி அவரின் கருத்து என்ன?**

அவ்வாறு செல்வதில் அவருக்கு உடன்பாடு கிடையாது. அவருக்கு மத உணர்வே கிடையாது. எல்லோரும் சமமானவர்கள் என்றே வாழ்ந்தவர்.

**16. திரு சந்திரபோஸ் வாழ்ந்த பகுதியில் உள்ள தலித் மக்களின் வாழ்வில் முன்னேற்றங்கள் நிகழ்ந்துள்ளனவா? அதில் அவரின் பங்கு யாதேனும் உள்ளனவா?**

நிகழ்ந்துள்ளன. அவரின் எழுத்தின் வழி மட்டுமே சமுதாய விழிப்புணர்வு செய்தார். நேரடியான பங்கு எதுவுமில்லை.

**17. தற்காலப் பெண்ணிய நிலை பற்றி அவர் தங்களோடு பகிர்ந்து கொண்ட செய்திகள் ஏதேனும் உண்டா? அவரின் கருத்து என்ன?**

உண்டு. தற்காலப் பெண்கள் யாருக்கும் அஞ்சாமல் இருக்க வேண்டும் என்பதே அவரின் கொள்கையாக இருந்தது.

***18. தலித் இலக்கியங்களைத் தலித்துக்கள் மட்டுமே படைக்க வேண்டுமா? தலித் அல்லாதவர்களும் படைக்கலாமா? அவரின் கருத்தோடு தங்களின் கருத்தும் என்ன?***

*இதுபற்றி அவரின் கருத்து ஏதும் அறியவில்லை. தலித் இலக்கியம் யார் வேண்டுமானாலும் படைக்கலாம். ஆனால் வலி உள்ளவனுக்குத்தான் அந்த வலியைப் பற்றி உணர முடியும். ஆகையால் தலித் எழுத்தாளன் ஒருவனே அவர்களுடைய உண்மை நிலையினை எடுத்துரைக்க முடியும் என்பதே என்னுடைய கருத்தாகும்.*

***19. இந்தியா போன்ற ஜனநாயக நாட்டில் பொதுவுடைமைச் சிந்தனைகள், கருத்தாடல்கள் போன்றவற்றினால் ஏதேனும் மாற்றம் ஏற்பட வாய்ப்புள்ளது குறித்து ஏதேனும் விமர்சனம் செய்துள்ளாரா?***

*இந்தியா போன்ற சனநாயக நாட்டில் பொதுவுடைமை சிந்தனைகளால் ஓரளவுதான் மாற்றம் ஏற்பட வழி உண்டு. மேற்கு வங்காளம், கேரளா போன்ற மாநிலங்களில் பின்பற்றப்படுகிறது. பொதுவுடைமைச் சிந்தனைகளை அனைத்து மாநிலங்களும் பின்பற்றினால் நாடு நல்ல முன்னேற்றம் காண முடியும் என விமர்சனம் செய்துள்ளார்.*

***20. இன்றைய சாதிய மோதல்களுக்குத் திரு சந்திரபோஸ் சுட்டும் தீர்வு என்ன? அவரின் படைப்பின் வழியில் நின்றுகூட கூறலாம்?***

*இன்றைய சாதி மோதல்களுக்குக் கல்வியே ஒரு தீர்வாக அமையும். அனைவரும் கல்வியறிவு பெற்றவராக இருக்க வேண்டும் என்பதே ஆகும்.*

***21. மார்க்சிய, சோசலிச சிந்தனையாளராக அவர் பரிணமித்ததிற்கு ஏதேனும் சிறப்புக் காரணங்கள் உள்ளனவா?***

*மார்க்சிய, சோசலிச சிந்தனைகளை, அவரின் தோழர்களாகவும் வழிகாட்டிகளாகவும் இருந்த தோழர் அ.நல்லகண்ணு, ஜெயகாந்தன், சி.ஏ.பாலன் போன்றவர்களுடன் பழகிய நட்பு வழிவகையாக அமைந்தது எனலாம்.*

***22. மார்க்சிய சோசலிச சிந்தனைகள் பற்றித் தங்களுக்குக் கற்றுக் கொடுத்துள்ளாரா?***

*கற்றுக் கொடுத்துள்ளார்.*

***23. திரு சந்திரபோஸ் அவர்களோடு இலக்கிய எழுத்தாளர்கள் கொண்டிருந்த நட்பு பற்றி கூறுங்களேன்.***

*இலக்கிய எழுத்தாளர்களாக தனுசுகோடி, ராமசாமி, பொன்னீலன், சந்திரகாந்தன், பாலபாரதி போன்றவர்களுடன் நல்ல நட்புடன் பழகி வந்தவர்.*

***24. இன்றைய அரசியல் தலைவர்களோடு திரு.சந்திரபோஸின் உறவுநிலை எங்ஙனம் இருந்துள்ளது? அது பற்றித் தங்கள் கருத்து என்ன?***

*இன்றைய அரசியல் தலைவர்களுடன் அவர் குடும்ப உறுப்பினர் போன்றே பழகி வந்தார். பொதுவுடைமைச் சிந்தனை உள்ள அரசியல் தலைவர்களுடன் மட்டுமே நட்பு கொண்டிருந்தார். அவருடைய இறுதிச் சடங்கில் அ.நல்லகண்ணு, டி.ராசா, போன்றவர்கள் கடைசிவரை இருந்து கலந்து கொண்டதே அரசியல் தலைவர்களுடன் இருந்த நட்பை அறியலாம். அவர் பொதுவுடைமைச் சிந்தனைவாதியாக இருந்ததை எண்ணி நான் பெருமையாகக் கருதுகிறேன.*

***25. வேறு ஏதேனும் சிறப்புச் செய்திகள் உண்டா?***

*அவர் ஒரு சிறந்த இசைப்பிரியர். இளையராஜா பாடல்களை விரும்பிக் கேட்பார். நன்றாகப் பாடவும் செய்வார்.*

தகவலாளரின் கையொப்பம்

இலக்கிய ஞானபீடமும்
மானுடம் பாடிய
வானம்பாடியும்
உடன்
எழுத்தாளர்
சந்திரகாந்தனும்





இலக்கிய ஞானபீடமும்
மானுடம் பாடிய
வானம்பாடியும்

இலக்கிய ஞானபீடம்
மானுடம் பாடிய
வானம்பாடி
குடும்பத்தாரும்





இலக்கிய ஞானபீடமும்
மானுடம் பாடிய
வானம்பாடியும்
அவரது
அன்னையும்



கவிஞர் பரிணாமன்
நடிகர் சாருஹாசன்
உடன்
மானுடம் பாடிய
வானம்பாடி



நடிகர் சாருஹாசன்
உடன்
மானுடம் பாடிய
வானம்பாடி



நடிகர் சாருஹாசன்
மானுடம் பாடிய
வானம்பாடி
மகளுடன்





கவிஞர் பரிணாமன்
நண்பர்
சுதந்திரராஜன்
மற்றும்
மகளுடன்
மானுடம் பாடிய
வானம்பாடி



கவிஞர் பரிணாமன்
இலக்கிய ஞானபீடம்
ஜெயகாந்தன்
மற்றும்
குடும்பத்தாருடன்



ஒரு அன்னையின்
காணிக்கை
நூல் வெளியீட்டு விழா



ஒளிப்பதிவாளர்
பாலுமகேந்திரா
மற்றும்
நண்பர்
அசோக் சீனிவாசன்
எழுத்தாளர் ஈரோடு தமிழன்பன்
கவிஞர் முத்துலிங்கம்
டிஜிபி குமாரசாமியுடன்
மானுடம் பாடிய
வானம்பாடி



டிஜிபி குமாரசாமி
நண்பர் வேணுகோபால்
உடன்
மானுடம் பாடிய
வானம்பாடி



நண்பர்
அசோக் சீனிவாசனுடன்
மானுடம் பாடிய
வானம்பாடி




தமிழ் சினிமா
சில பார்வைகளும்,
சில பதிவுகளும்
நூல் வெளியீட்டு
விழாவில்
மானுடம் பாடிய
வானம்பாடி



நண்பர்
வேணுகோபால்
மகள் மற்றும்
மருமகனுடன்
மானுடம் பாடிய
வானம்பாடி



சுதந்திரராஜன் , பரிணாமன் மற்றும் மகள் பிருந்தாரமணியுடன் மானுடம் பாடிய வானம்பாடி.



நவபாரத்வுடன் சந்திரபோஸ்



ஈரோடு தமிழன்பன் மற்றும் வேணுகோபால் உடன் சந்திரபோஸ்



சு. குமாரசாமி **D.G.P** (ஓய்வு) அவர்களுடன் சந்திரபோஸ்



தான் சார்ந்த இயக்கத் தோழருடன் மானுடம் பாடிய வானம்பாடி



அசோக் சீனிவாசன், சாருஹாசன், ஈரோடு தமிழன்பன், கவிஞர் முத்துலிங்கம் உடன் சந்திரபோஸ்.



இயக்குநர் பாலு மகேந்திரா, அசோக் சீனிவாசன், வேணுகோபால் ஆகியோருடன் படைப்பாளி சந்திரபோஸ்



அசோக் சீனிவாசன் மற்றும் சாருஹாசன் உடன் மானுடம் பாடிய வானம்பாடி.




பணி முதிர்வு பாராட்டு விழாவில் திரு. அசோக் சீனிவாசனுடன் சந்திரபோஸ்



மகள் பா. பிருந்தாரமணி , மருமகன் முனைவர். மு. பாண்டி அவர்களுடன் மானுடம் பாடிய வானம்பாடி



மேலக்கோனம்பட்டி, மானுடம் பாடிய வானம்பாடி சந்திரபோஸ்



பா. ராஜேஸ்வரி , பா. பாலசிவக்குமார் மற்றும் ஜெயகாந்தன் அவர்களுடன் சந்திரபோஸ்

சகுந்தலை வெளியிடும்

# தமிழ் சினிமா: சில பார்வைகளும் சில பதிவுகளும்

## நூல் வெளியீட்டு விழா

## அழைப்பிதழ்

வரவேற்பு

**ஆ.அசோக்சீனிவாசன்**

சகுந்தலைக்காக

நடப்பும் விளிப்பும்

**மு.குமரேசன்**

தலைமை

நீதியரசர் **பொன்.பாஸ்கரன்**

நூல் வெளியீடு

**பாலுமகேந்திரா**

தேசிய விருதுகளைப் பெற்றுத்தந்த திரைப்பட இயக்குநர்

நூல் பெறுபவர்

**எஸ்.சாருஹாசன்**

தேசிய விருது பெற்ற திரைப்பட நடிகர்

வாழ்த்துரை

கவிஞர் **ஈரோடு தமிழன்பன்**

**சு.குமாரசாமி** இ.கா.ப. - Ex.DGP

துணைத்தலைவர், விளையாட்டு மேம்பாட்டு ஆணையம்

கவிஞர் **முத்துலிங்கம்**

கவிஞர் **யுகபாரதி**

ஏற்புரை

நூலாசிரியர் **ஆ.சந்திரபோஸ்**

நன்றி

**தி.நடராசன்**, விழிகள் பதிப்பகம்



நாள்: 26.12.2008 - மாலை 5.30 மணி

இடம்: தென்னிந்தியத் திரைப்பட வர்த்தக சபை

(Film Chamber) அண்ணா மேம்பாலம் அருகில்




சந்திரகாந்தனுடன் மானுடம் பாடிய வானம்பாடி சந்திரபோஸ்




தமிழ் சினிமா: சில பார்வைகளும் சில பதிவுகளும் நூல் வெளியீட்டு விழாவில் இலக்கியவாதிகள்.

# சந்திரபோஸ் புனைகதைகளில் சோசலிச யதார்த்தவாதம்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப் பகுதி நேர முனைவர் (பிஎச்.டி.,)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**இரா. கண்ணன்**

(பதிவு எண்: 523)

நெறியாளர்

முனைவர் **ஆ. சீனிவாசன்**

தமிழ் உயராய்வு மையம்
அழகப்பா அரசு கலைக்கல்லூரி
காரைக்குடி - 630 003




**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசிய தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் 'A+' (CGPA: 3.64) தகுதி மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக் குழுவின்
முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003.

தமிழ்நாடு - இந்தியா

**ஜூன் - 2018**

## முடிவுரை

*மானுடம் பாடிய வானம்பாடி என்ற அடைமொழியுடன் அறியப்படும் ஆ.சந்திரபோஸ், விருதுநகர் மாவட்டம், மேலக்கோனம்பட்டி என்னும் சிற்றூரில் எளிய விவசாயக் குடும்பத்தில் **07.05.1946**ஆம் ஆண்டு பிறந்தவர். அவருடைய பெற்றோர் ஆண்டியப்பன்-இராக்கம்மாள் தம்பதியாவர். அவருக்கு ஒரு சகோதரர், ஒரு சகோதரி உள்ளனர்.*

*கல்லூரியில்* (PUC) *புதுமுக வகுப்புவரை பயின்றுள்ளார். திருமணம் செய்து கொள்ளவில்லை.*

*தமிழகக் காவல்துறையில் அமைச்சுப் பணியாளராக **1969**இல் பணியில் சேர்ந்து, முப்பத்தி மூன்று ஆண்டுகள் பணியாற்றி **2004**ஆம் ஆண்டு ஓய்வு பெற்றார். இவர் **12.03.2012** அன்று உடல்நலக்குறைவால் இயற்கை எய்தினார்.*

*ஜெயகாந்தன், பொன்னீலன், ஈரோடு தமிழன்பன், து. இராசா, அசோக் சீனிவாசன், சந்திரகாந்தன், இரா. நல்லகண்ணு, தி.வேணுகோபால், தீபம் கா. பார்த்தசாரதி, அறந்தை நாராயணன், தி.சு. நடராசன், பரிணாமன் போன்றவர்களுடன் நெருக்கமான தொடர்பு கொண்டவர்.*

*தாமரை, கணையாழி, எழுத்து, ஆனந்தவிகடன் போன்ற இதழ்களில் சிறுகதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள், புதினங்கள், கவிதைகள் என எழுதி வந்துள்ளார்.*

புதினங்கள், குறும்புதினங்கள், சிறுகதைகள் படைத்துள்ளார். கவிதை நூல் ஒன்றும், திரைப்பட விமர்சனக் கட்டுரை நூலும் படைத்துள்ளார். அவரின் முதல் சிறுகதை - உழைப்பின் பிரதிபலன் நட்டம், புதினம் - கரைசேரும் ஓடங்கள் ஆகும்.

சோசலிச யதார்த்த இலக்கியம் செய்து, இடதுசாரி இயக்கத்தை வலுப்படுத்துபவராகவும், முன்னெடுத்துச் செல்பவராகவும் விளங்கியவர்.

தான் சார்ந்த இனம் குறித்து எழுதினாலும், அதிலும் ஒரு சமத்துவச் சிந்தனையைக் காணமுடிகிறது. பொதுவுடைமைச் சிந்தனையாளரான சந்திரபோஸ், சோசலிச எண்ணத்துடனே தனது கதைக்களத்தை அமைத்துள்ளார். அதனால் பல நேரங்களில் எதிர்ப்புணர்வையும் தாங்கியவராகவும் காணப்படுகிறார். சூறாவளிக் காற்றினூடாக விளக்கின் ஒளி, சுடர்விட்டு ஒளிரும் என்ற நம்பிக்கைதான் மனித இருப்பினை அர்த்தப்படுத்துகிறது. எளிய மனிதன் மீதான சந்திரபோஸின் கரிசனை அவரின் கதைகளில் உறைந்திருக்கிறது.

படைப்பாளியின் கருத்துக்களையும் மீறி வெளிப்பட்டு நிற்பதுதான் யதார்த்தவாதம் ஆகும். சந்திரபோஸின் கதைகள் சோசலிச யதார்த்தவாதக் கொள்கைகளுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. அவை வாழ்வின் உண்மைகளைச் சொல்லின; அவற்றின் நிறைகுறைகளை விமர்சன பூர்வமாகச் சொல்லின. புதிய சமுதாயம் படைக்க நடக்கும் ஒரு போராட்டத்தையும் சொல்லின.

நம்பிக்கையோடு எதிர்காலத்தை நோக்கும் ஒரு தலைமுறை பற்றிச் சொல்கின்றன. யதார்த்தவாதம், விமர்சனபூர்வ யதார்த்தவாதம் இரண்டையும் உள்ளடக்கி மனிதனின் படைப்பாற்றலைக் கோடிட்டுக் காட்டுகிற சோசலிச யதார்த்தவாதமாகவும் அவை இருக்கின்றன.

வருங்காலம் சோசலிசத்திற்கே சொந்தம் என வெளிப்படையகப் படைப்பாளி அறிவிக்க வேண்டியதில்லை. தனது கதையின் நாயகன் கடைசியில் சோசலிச முழக்கம் கொடுத்துக் கொண்டு கம்யூனிஸ்டு ஊர்வலத்தில் போவதாகக் கதையை முடிக்க வேண்டிய கட்டாயமில்லை. கதையின் சூழலிலிருந்து பாத்திரங்களின் செயல்பாடுகளிலிருந்தும் வெளிப்பட வேண்டும் என்று கருதுகிற ஏங்கல்ஸின் கோட்பாட்டின்படி சந்திரபோஸ் (குழலூதி வருவான் குமுந்தன்) புதினத்தைப் படைத்துள்ளார் என்பது பெறப்படுகிறது.

புரட்சிகர கொள்கையினைக் கொண்டவராகச் சந்திரபோஸ் விளங்கினாலும், முரட்டுப் பலா; உள்ளே இனிப்புச் சுளைகள் என்பதைப் போல விளங்குகிறார்.

சாதியத்தின் வேர் ஆழமாகப் பரவி எங்கும் வியாபித்திருக்கிறது என்பதைப் புரிந்து கொண்ட சந்திரபோஸ், தன்னால் இயன்ற அதன் கிளைகளை வெட்டுகின்ற வேலையினைத் தம் புனைகதைகளின் வழி செய்துள்ளார்.

அமைதியான உலகைப் படைக்கச் சமத்துவம் (சோசலிசம்) என்ற உணர்வு தேவைப்படுகிறது. ஆதிக்க சக்திகளால் மூட்டிவிடப்பட்ட நெருப்பு. ஆண், பெண், குழந்தைகள்

மட்டுமல்லாமல் அன்பு, பரிவு, அறம், நியாயம் போன்ற மனிதப் பண்புகளையும் பொசுக்கித் தீர்த்து விடுகின்றது என்பது கதைகளின் வழி அறிய முடிகிறது.

சந்திரபோஸ் தனது புனைகதைகளில் மக்களிடையே மத ஒற்றுமையும், சகிப்புத்தன்மையும், மனிதநேயமும் இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தியுள்ளார்.

இவரின் கதைகளில் பார்ப்பினியம் அதிகம் பேசப்படவில்லை. மேட்டுக்குடியினராகக் காணப்படும் பிற (நாயக்கர்) இனத்தவரே புனைகதைகளில் அதிகம் காணப்படுகின்றனர். அவர்களின் அடக்குமுறைகளை எந்தவிதச் சமரசமும் இன்றித் துணிச்சலுடன் கையாண்டிருப்பது கவனத்திற்குரியதாகும்.

சந்திரபோஸ் சோசலிசவாதி என்பதில் மாற்றுக்கருத்தில்லை. மார்க்சியத்திற்கு எதிரானது தலித்தியம் என்பவர்களுக்கு மத்தியில் தலித்தியத்தையும் மார்க்சியத்தையும் ஒரே நேர்கோட்டில் கொண்டு செல்வது அவரின் தனிச்சிறப்பு என்பது அறியலாகிறது.

இவரின் புனைகதைகளில் சாதியம் அதிகம் பேசப்பட்டாலும், அதில் ஒரு நியாயம் இருப்பதாகவே காணப்படுகிறது. சாதிச் சண்டைகளால் பழிக்குப்பழி வாங்கும் எண்ணத்திலிருந்து அனைத்துச் சாதியினரும் அமைதியை விரும்புபவர்களாகக் கதை மாந்தர்கள் படைக்கப்பட்டிருப்பது சந்திரபோஸின் சோசலிச யதார்த்தத்தைக் காட்டுகிறது. இருப்பினும் அறச்சீற்றமும், சிறுமை கண்டு பொங்கும்

மனநிலையும் அவரின் புனைகதைகள் வழியே வெளிப்படுவதை அவதானிக்க முடிகிறது.

உழைத்த வேர்வைகூடக் காயாத பொழுதுகளில்கூட யோனியில் அமுதம் கடைந்து உண்ணத் துடிக்கும் மேட்டுக்குடியினரின் போக்கைக் கதையில் பதிவு செய்து, வர்க்கப் போராட்டத்திற்கு ஆதரவானது செங்கொடி ஏந்தும் பொதுவுடைமைக் கட்சி என்று கூறுகிறார். வர்க்கப் போராட்டம் தான் ஒடுக்கப்பட்டவர்களை ஒற்றிணைக்கும் என்பதைப் புனைகதைகள் வலியுறுத்துகின்றன.

ஒடுக்கப்பட்டவர்களின் நலனுக்காகப் பாடுபடும் ஒரே இயக்கம் மார்க்சிய இயக்கம். செங்கொடி ஏந்திய பொதுவுடைமைக் கட்சிக்காரர்களின் போராட்டம் ஒரு விடியலைத் தரும் என்ற நம்பிக்கை மக்களிடம் இருப்பதையும், அடிபட்ட மனிதர்களுக்காக எந்தவித பிரதிபலனையும் எதிர்பார்க்காதக் கட்சி பொதுவுடைக் கட்சி என்பதையும் புனைகதைகளில் அழுத்தமாகப் பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

பிற சாதியினரால் பாடை கட்டப்பட்டுத் தூக்கிச் செல்கின்ற ஒடுக்கப்பட்டவரின் பிணத்தைக் காட்சிப் படுத்துவதில் சோசலிச யதார்த்தம் காணப்படுகிறது. சோசலிசம் அனைவரின் மனதிலும் நிலை கொள்ள வேண்டும் என்பதே சந்திரபோஸின் எண்ணமாக இருந்திருக்கிறது.

சாதி வெறியினால் தூண்டப்பட்டு, எதிர் சாதியினரைக் கொன்று குவித்து, பிற சாதிப் பெண்களைப் பாலியல் வன்புணர்ச்சிக்குள்ளாக்கும் மனிதர்களின் செயல்பாடுகளைச் சந்திரபோஸ் விவரிக்கும் விதத்தில் வன்முறையாளர்கள் மீது கோபம் ஏற்படும் வேளையில், ஏன் இப்படி மனிதர்கள் ஏதோ ஒன்றின் பெயரால் தங்களுடைய இருப்பினை நாசப்படுத்துவதுடன் ஆன்மாவினையும் சிதைத்துக் கொள்கின்றனர் என்ற அவரின் மனிதநேயச் சிந்தனையை அறிய முடிகிறது.

ஒரு சமூகத்தினர் பதட்டமும், இன்னொரு சமூகத்தினர் உற்சாகமும் கொள்வது பாசிசத்தின் கோரமான வெளிப்பாடுகள். இத்தகைய நிலையினைச் சந்திரபோஸ் நுணுக்கமாகப் பதிவாக்கி உள்ளார்.

சாதி இழிவின் கோரமான விளைவுகள் என்று ஆவணமாகப் பதிவு செய்வது மட்டும் சந்திரபோஸின் நோக்கமாக இல்லை. அவர் படைத்திட்ட கதாபாத்திரங்கள் வளமையிலிருந்து மீறி, மிகைப்படுத்தப்பட்ட யதார்த்தத் தளத்தில் இயங்குவதனால் வெற்றுச் சோகமும் அனுதாபமும் ஏற்படுவது தவிர்க்கப் பட்டுள்ளன. கதையாடலில் வாசிப்பின் மூலம் தோன்றும் கூர்மையான கேள்விகள் சாதி இழிவின் விளைவான மனிதர்களின் விலங்குத்தனமான செயல்களையும், அப்பாவித்தனமான போக்குகளையும் முன்னிலைப் படுத்துகின்றன. வன்முறை என்பது உடல் ரீதியில் மொழியின் வழியாகக் கட்டமைக்கப்பட்ட அதிகாரத்தின் வெளிப்பாடு

என்பதனைச் சந்திரபோஸின் கதைகள் நுணுக்கமாக வெளிப்படுத்துகின்றன.

தன்னலவாதிகளின் தன்னலத்தையும், ஆண், பெண் என்று பாகுபடுத்துவாரின் கொள்கைகளையும் சமூக நெறியில் ஒழிப்பதைச் செயல்பாடாகவும் கொண்டுள்ளது சோசலிசப் பெண்ணியமாகும். இத்தகைய பண்புநலன்களைக் கொண்ட கதைகளாக, சந்திரபோஸின் புனைகதைகள் உள்ளன என்பது பெறப்படுகிறது.

சந்திரபோஸின் புனைகதைகளின் மையமாக விளங்குவது பாலியல் கொடுமைகளும், பெண் மேல் நிகழ்த்தப்படும் வன்முறைகளும்தான். இதிலிருந்து அவர்கள் மீண்டு வரவும், எதிர்த்துப் போராடவும் வர்க்கப் புரட்சிப் பெண்களைப் படைக்கவில்லை. உணர்வு தளத்தில் இயங்குகின்ற சுயமரியாதையுள்ள உழைக்கும் ஏழைப் பெண்கள் மற்றும் அறிவுசார்ந்தத் தொழில்புரியும் பெண்களும் கதைகளின் மையப் பொருளாகப் பேசப்படுகின்றனர்.

சந்திரபோஸ் படைப்புகளில் சாதி, மதம் கடந்தக் காதல் திருமணங்களைப் பதிவு செய்துள்ள யதார்த்தம் அறிய முடிகிறது. கணவனை இழந்தப் பெண் தனக்குத் துணையாகத் திருமண பந்தம் இல்லாமல் ஓர் ஆணுடன் சேர்ந்து வாழ்வதற்கு இந்தச் சமூகம் இணக்கம் காட்டுவதில்லை. அந்த யதார்த்தத்தோடு வாழும் தன்மையை தம் படைப்புகளில் கொண்டு வந்துள்ள ஆசிரியர், பெண்களுக்குச் சுதந்திர உணர்வையும் கொண்டு வந்துள்ளார்.

பெண்கள் பல்வேறு போராட்டங்களுக்கு மத்தியில் வாழ்வியலை எதிர்நோக்குகின்றனர். ஆணாதிக்கச் சமூகத்தில் பெண் வாழ வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டுள்ளது. தன் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதில் பெண்களுக்கு பல் சிக்கல்கள் உள்ளன. பெண்களைப் பொறுத்தவரையில் திருமணம் என்பதை அவள் தன் வாழ்க்கையின் ஆதாரமாகச் சார்ந்திருக்க வேண்டியிருக்கிறது. பொதுவாக ஒரு பெண் தன்னை ஓர் ஆண் தேர்ந்தெடுப்பதற்காகக் காத்திருக்க வேண்டியிருக்கிறது என்பதைச் சந்திரபோஸின் பல புனைகதைகளின் வழி அறியலாகிறது.

துணை எழுத்து என்ற சிறுகதையில் யதார்த்த வாழ்வியலை அமைத்துக் கொள்ளும் கதாபாத்திரங்களின் முரணாக, ஆண் தலைமைப் பாத்திரம் விளங்குகிறது. ரகுராமன் மல்லிகாவின் விதவைத் தாய் காவேரியைத் திருமண பந்தமில்லாமல் வாழ்க்கை நடத்துவதும்; அதை நியாயப்படுத்துவதும் கதை சொல்லியின் செயலாக உள்ளது. ரகுராமனின் தனிப்பட்ட வாழ்க்கைக் குறித்துக் கதை சொல்லி ஏதும் கூறாமல் விட்டது நெருடலை ஏற்படுத்துவதாக ஆய்வாளர் கருதுகிறார்.

சந்திரபோஸின் புனைகதைகள் யதார்த்தமாக அமைக்கப்பட்டிருந்தாலும், சில கதைகள் வலிந்து சொல்லப்பட்டது போன்ற உணர்வு காணப்படுகின்றன.

சட்டப்பூர்வ மணமுறிவுக்குப் பின்னரும் இணைந்து வாழ வாய்ப்பு கிடைக்குமா? என்ற எதிர்பார்ப்புடன் பாத்திரங்கள்

படைத்திருப்பது போன்ற கதை நகர்வு சற்றே வேறுபட்டுக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. திருமணம் ஒரு பெண்ணிற்கு எத்தகையப் பாதுகாப்பை அளிக்கவல்லது என்பதை மணமுறிவுக்குப் பின்னரே பெண் பாத்திரம் உணர்வதாகக் காட்டியுள்ளார். யதார்த்த வாழ்வியலாக இருப்பினும் பிற்போக்குத் தன்மையாகவும் காணப்படுகின்றது.

மண வாழ்வில் கணவனால் ஏற்பட்ட சிக்கல்களால் அவனிடமிருந்து விலகியிருக்கும் அவள், திருந்திய கணவனாக வந்தும் அவனை ஏற்க மனம் மறுத்தப் தீவிரவாதப் பெண்ணியவாதியையும் படைத்துள்ளார். வேறொருவனுடன் குடும்பம் நடத்திய பின்னர், வறுமையின் பிடியிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள மீண்டும் கணவனுடன் வந்து சேர்ந்து வாழும் அடித்தட்டு மக்களின் யதார்த்தத்தையும் படைத்துள்ளார். இருவேறு முரண்பட்ட பாத்திரங்களைத் தம் படைப்பில் கொணர்ந்துள்ளார்.

மறுமண உரிமை, திருமணவிலக்கு உரிமை, கலப்புமண உரிமை ஆகிய மூன்று உரிமைகளும் பெண்ணியச் சிந்தனைகளாகும். மறுமண உரிமை எனும் மையக் கருத்தையே கருவாகக் கொண்டு புதினம் படைத்துள்ளார். பெண் என்பவள் ஒருவனைத் திருமணம் செய்து கொண்ட பிறகு, விருப்பம் இருந்தாலும் இல்லையென்றாலும் அவனுடனேயே வாழ வேண்டும் என்ற மரபைச் சமூகம் வலியுறுத்துகின்றது. ஆனால் எழுத்தாளர் சந்திரபோஸ் அம்மரபை மீறித் தனக்கு விருப்பமானவனைப் பெண் திருமணம் செய்து கொள்ளலாம் என்ற கருத்தை வலியுறுத்துகிறார். திருமணமான ஒரு

பெண், தன் ஊதாரிக் கணவனை உதறித் தள்ளிவிட்டு, வேறொரு திருமணம் செய்து கொள்ள உரிமை வழங்கியது பாராட்டுக்குரியது.

குடும்பச் சூழலில் ஒரு பெண்ணிற்கு உண்டாகும் சிக்கல்களுக்குக் கணவன் அடிப்படைக் காரணமாக அமைகிறான். கணவன், மனைவிக்கிடையே நிகழும் சிக்கல்களில் கணவனின் கொடுமை புனைகதையில் காணலாகிறது. மனைவியை ஐயுறும் கணவனைக் காட்சிப்படுத்தியுள்ளார். மனைவியினால் அல்லலுறும் கணவனைப் படைக்காமல் தானொரு பெண்ணியவாதி என்பதை உறுதிப்படுத்தியுள்ளார்.

கணவனின் உறவில் கரைந்து போன நாட்களில் வயோதிகமே ஆனாலும் இளமைத் துடிப்பானவை. பாசத்திற்கும், காதலுக்கும் வயதில்லை என்பதைப் பத்மாவதி பாட்டி என்ற பாத்திரத்தின் வழி படைத்துள்ளமை அவரின் அன்பின் வழியது உயிர்நிலையைக் காட்டுகிறது.

சோசலிச யதார்த்தத்துடன் பழகும் நட்பிற்கு ஆண், பெண் என்ற பாகுபாடு தெரியாது என்பதை ரேணு - கண்ணபிரான் பாத்திரங்கள் எடுத்துக்காட்டுகின்றன. திருமணம் என்பது தனிமனிதனின் வாழ்விலும் ஒரு குடும்ப வரலாற்றிலும் மிக முக்கியமான நிகழ்ச்சி. இது பெண்ணின் அடிப்படைத் தேவைகளுள் ஒன்றாக விளங்குகிறது. குடும்பம் என்கிற அமைப்பில் ஆண் கணவனாகத் தான் இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. அவன் ஒரு நண்பனாகவும் இருக்கலாம். இந்த நட்பு உறுதிப்படுகிற

பொழுது பிரிக்க முடியாத உறவாகக் குடும்பம் வளரும். ஆண் பெண் புரிதலுக்குள் தோல்வியோ, ஏமாற்றமோ ஏற்படுகின்ற பொழுது நண்பர்களாகவே பிரிந்து விட வாய்ப்பு ஏற்படுகிறது என்ற முத்தாய்ப்பைப் புனைகதைகள் வழி உணரமுடிகிறது.

வேலைக்குச் செல்லும் பெண்களின் சிக்கல்களையும், அதனால் அவர்கள் வாழ்க்கையில் ஏற்படும் மாற்றங்களையும் பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

தலித், மார்க்சிய, சோசலிசம் குறித்து விளக்கப் பெற்றுள்ளது. மார்க்சியம் அனைத்துப் பிரச்சினைகளையும் பொருளாதார அடிப்படையில் நோக்குகிறது. கம்யூனிசம் சோசலிசத்தின் ஒரு வடிவமாகும். தகுதிக்கேற்ற வேலை; உழைப்பிற்கேற்ற ஊதியம் என்பது சோசலிசம் ஆகும். சோசலிசம் என்பது முதலாளித்துவத்திலிருந்து கம்யூனிசத்திற்கு இடைநிலை காலத்தில் சமூகத்தின் நிலையாக அறியப் பெறுகிறது.

பிறப்பால் ஒடுக்கப்பட்ட இனத்தைச் சார்ந்த சந்திரபோஸின் புனைகதைகளில் தலித்திய உணர்வுகள் வெளிப்பட்டுள்ளமை யதார்த்தமாகும். இவரின் படைப்புகள் வெவ்வேறு தளங்களில் பிரச்சினைகளை எதிர்கொண்டுள்ளன. சில இடங்களில் தலித் மக்களின் துயரங்களும் அவலங்களும் கதைக்களனாகும் நிலையில் காத்திரமான அரசியல் வெளிப்பாடு புனைகதைகளில் வெளிப்படுகின்றன. தமிழ்ப் பண்பாட்டுச் சூழலை மையமிட்டு சந்திரபோஸின் புனைகதைகள் தமக்கான வாசகர்களைத் தேடிக் கொண்டிருக்கின்றன.

விளிம்புநிலையினரைக் கருவாகக் கொண்டு புதியதான உத்திகளைக் கையாண்டுள்ள சில சோதனைப் புதினங்கள், தமிழ்க் கதையாடல் மரபை மாற்றி அமைத்துள்ளன என்பதற்குச் சான்றுகளாகவே சந்திரபோஸின் படைப்புகள் இருக்கின்றன என்பது பெறப்படுகிறது.

வெறுமனே கதைசொல்லியால் யதார்த்தமாகச் சொல்லப் பட்டுள்ள சில கதைகள், வாசிப்பதற்கு அலுப்பை ஏற்படுத்தவும் செய்கின்றன.

சந்திரபோஸின் ‘பிரபஞ்ச கானம்’ என்னும் புதினம் தன்னிலை விளக்கப் புதினமாகக் காண்படுகிறது. சுயவரலாறா? அல்லது புனைகதையா என்ற ஐயம் ஏற்படும் அளவிற்குக் கதையோட்டம் அமைந்துள்ளது.

அரசியலில் பொதுவுடைமைக் கட்சியின் யதார்த்தம் குறித்துக் கவலைப்படும் சந்திரபோஸ், ஆதங்கத்தையும் வெளிப்படையாகக் கூறுகிறார். ஒரு வர்க்கப் போராட்டத்தை வென்றெடுக்கும் கதைக்களத்தையும் படைப்புகளில் கொண்டு வந்துள்ளார் ஆசிரியர்.

பொதுவுடைமைக் கட்சியினரின் பொறுப்புணர்ச்சியைக் காட்டும் சந்திரபோஸ், உணர்ச்சிகரமான சூழ்நிலையில் மக்களை ஒன்றிணைக்கும் சக்தி படைத்தவர்களாக இருப்பதையும் காட்டத் தவறவில்லை.

இவரின் புனைகதைகள் கற்பனைக் கதைகளாக இருக்க வாய்ப்பில்லை. அவரைக் கடந்து சென்ற மனிதனின் கதையாகவும் இருக்கலாம். அவருக்கு ஏற்பட்ட ரணங்களின் கதைகளாகவும் இருக்கலாம். ஏனெனில் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தின் அடிப்படையில்; தான் சார்ந்த இயக்கத்தின் வழி ஏற்பட்ட அனுபவத்தின் அடிப்படையில் தான் புனைகதைகளை அவர் படைத்திருக்க வேண்டும். அவைகள் புனைவுகள் அல்ல; அத்தனையும் யதார்த்தமாகும்.

மிகை யதார்த்தப் போக்கைக் கையாளவில்லை என்பதற்கு அவரின் கதைகளில் காணப்படும் பாத்திரங்களின் பெயர்களை வைத்தே கணக்கிடலாம். மேற்சாதிப் பாத்திரங்களின் பெயர்கள் வீரப்ப நாயக்கர், சர்மா ஐயர், நாகலிங்கம், துரைசாமி... ஒடுக்கப்பட்டவர்களின் பெயர்களாகக் குத்திபகடை, காலாடிக் குடும்பன், சுந்தரலிங்கக் குடும்பன், மாரிமுத்து, வேலம்மா, தங்கம்மா... போன்ற பெயர்கள் கதைகளில் காணப்படுகின்றன.

காலங்காலமாக ஒடுக்கப்பட்டவர்களின் பெயர்கள் ஒருமையில் அழைப்பது போலவும், மேல்சாதியினரின் பெயர்கள் மரியாதை கலந்து வருவனவாகவும் அமைக்கப்படுகின்றன. இதில் இவரும் விதிவிலக்கல்ல. ஒடுக்கப்பட்டவர்களில் பார்த்தசாரதி கிடையாது. பார்த்தசாரதியைக் குடிகாரனாகக் காட்டவியலாது. குடிகாரன் என்றால் குப்பன், சுப்பன் தான் என்ற எண்ணம் எழுத்தாளர்களுக்கு ரத்தத்தில் ஊறி, நினைவில் வரும் போலும் என்ற கருத்தும் உள்ளது.

அவர் படைக்கும் பாத்திரங்களின் பெயர்களில் தான் சார்ந்த சமூகத்தின் அடையாளத்தைக் காட்டுவதற்கு மறக்கவில்லை. சுந்தரலிங்கம் என்ற சுதந்திர காலப் போராளியை, வர்க்கப் போராளியின் பாத்திரத்தில் படைத்திருப்பதை அறிய முடிகிறது. பள்ளர்கள் கச்சைக்கட்டி ஆடுவது அவர்களின் உரிமை என்பதன் காரணமாக, அவரின் சில கதைகளில் இவை கையாளப்பட்டுள்ளன என்பதும் ஆய்வில் பெறப்படுகிறது.

கதைகள் யாவும் யதார்த்தம் நழுவிவிடாத கதைகள். இயல்பான நடை ஓட்டத்திலும், பாத்திரங்கள் பேசும் வட்டார வழக்கிலும் போகிற போக்கில் கதை நிகழ்வை நகர்த்திச் செல்வதிலும் ஆசிரியரின் திறமையைக் காணமுடிகிறது.

சிற்றூர் மக்களிடையே இன்னும் மரபு மாறாத பண்புகள் ஆண்டாண்டு காலமாய்ப் பாசியாய்ப் படிந்தும், படர்ந்தும், கிடப்பதும், அதனை அகற்ற நினைப்போரின் செயற்பாடுகள் தீவிரமடைவதும் கதைகளில் காணப்படுகின்றன.

ஆசிரியர் வாழ்ந்த சிவகாசிப் பகுதி மண்ணில் வாழ்ந்த; தன்னைக் கடந்து, நடந்து சென்ற மனிதர்களின் கதைகள் தான் இவரின் பேனாவுக்குள் நுழைந்திருக்கின்றன என்றளவில், கதைகள் கரிசல் இலக்கியமாக இருக்கின்றன என்பது ஆய்வில் உணரப் பெறுகின்றது.

எந்தவொரு படைப்பும் அதன் பின்புலமாகச் செயல்படும் சமூக, அரசியல், பொருளாதாரக் கண்ணோட்டத்துடன் ஆராயப்பட

வேண்டும். அவ்வகையில் இங்குப் படைப்பு மற்றும் படைப்பாளர் செயல்பட்டதன் சமூகப் பின்புலம் ஆராயப்படுகின்றன. படைப்பாளர் கதைமாந்தர்களைத் தம் கதைகளில் சித்திரிக்க முற்படும் போதும், அவர்களை முன்மாதிரிகளாகப் படைக்கும் போதும், எப்பிரிவைச் சார்ந்த சாதி மாந்தர்களை முன்வைக்கிறார் எனும் கேள்வியும் அதற்கான காரணங்களும் ஆராயப்பட வேண்டும்.

படைப்பாளர் எந்தச் சாதிப்பிரிவைச் சார்ந்த கதைமாந்தர்களைத் தம் படைப்புகளில் முன்மாதிரிகளாகச் சித்திரித்துள்ளார் எனும் போது, பெரும்பான்மையும், சமூகத்தில் ஒடுக்கப்பட்ட மேலும், தான் சார்ந்த இனத்து மாந்தர்களையே சித்திரித்துள்ளார் என்பதும் சுட்டத்தக்கது.

தான் படைத்த கதாநாயகன் மீதே படைப்பாளி மோகம் கொண்டுவிடக் கூடாது. அவனை ஏற்றிப் போற்றிப் புகழத் துவங்கிவிடக் கூடாது. எல்லா பாத்திரங்களும் லட்சியப் பாத்திரமாகப் படைக்கப்பட்டிருக்கிறது என்றாலும் அதில் ஓரளவாவது தனிமனிதத் தன்மைகள் உள்ளன. ஆனால் ஐப்பசி மேகங்கள் என்ற புதினத்தில் வரும் கதை நாயகன் கண்ணபிரான் பாத்திரம் கதைத் தலைவனின் புகழ் பாடிக் கொண்டிருக்கிறது. இது சற்று நெருடலாக உள்ளது.

சந்திரபோஸின் எழுத்துக்களை அடுத்தத் தலைமுறைக்கு எடுத்துச் செல்லல் வேண்டும். அவர் நூல்கள் அனைத்தும் மறுபதிப்பு செய்து உலகறியச் செய்வற்கேற்றப் படைப்புகள் எனலாம்.

*சந்திரபோஸின் புனைகதைகளின் கதைக்கரு, கதைப்பின்னல், எழுத்து நடை, வருணனை, உத்தி, பாத்திரப் படைப்பு, உளவியல், கதைசொல்லியின் தனிக் கருத்துக்கள் குறித்து மேலாய்வு செய்வதற்கு இவ்வாய்வு துணை செய்கின்றது.*